

ஹநுமந்நஞ்ஜனீஸூநோ மஹாபல பராக்ரம |
லோலல் லாங்கூல பாதேன மமாராதீந் நிபாதய ||

அக்ஷக்ஷபண பிங்காக்ஷ திதிஜாஸூ க்ஷயம்கர ||
லோலல் லாங்கூல பாதேன மமாராதீந் நிபாதய ||

புச்சகுச்ச ஸ்புரத்வீர ஜகத்தக்தாரி பத்தன |
லோலல் லாங்கூல பாதேன மமாராதீத் நிபாதய ||

ஸ்ரீராம சரணாம் போஜ மதுபாயித மானஸ |
லோலல் லாங்கூல பாதேன மமாராதீந் நிபாதய ||

*ஹே! அநுமாரே! அஞ்சனையின் திருக்குமாரரே! அதி பல பராக்ரமமுடைய உமது ஆடுகின்ற வாலாகிய அஸ்திரத்தால் என் பகைவர்கள் அனைவரையும் அடித்துத் தள்ளுவீராக!*

*அட்சய குமாரனை அழித்த பிரபோ! மஞ்சள் நிறமுள்ள கண்களையுடையாய்! அசுரர்களின் உயிரை நாசம் செய்கின்றவரே! ஆடுகின்ற உமது வாலால் எனது சத்துருக்களை நாசம் செய்து தள்ளுவீராக!*

*வாலின் நுனியாகிய பூங்கொத்தில் பல வீரர்களைச் சுருட்டியவரே! சத்துருவின் பட்டினத்தில் தீ வைத்தவரே! ஆடுகின்ற வாலாகிய அஸ்திரத்தால் எனது பகைவர்களை அடித்துத் தள்ளும்!*

*ஸ்ரீ ராமருடைய திருவடிகளாகிய தாமரை மலர்களில் தேனைக் குடிக்கும் வண்டு போன்ற நெஞ்சம் உடையவரே! ஆடுகின்ற உமது வாலாகிய அம்பினால் எனது பகைவர்கள் அனைவரையும் அடித்துத் தள்ளுவீராக!*

***— ஸ்ரீ ஹநுமந் லாங்கூலாஸ்த்ர ஸ்தோத்ரம்.***

மே 1988

# ஸப்தகிரி

தனிப்பிரதி ரு 1 — மலர் 18

வருடச் சந்தா ரூ. 12 — இதழ் 12

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் — ஸ்ரீ பக்த ஆஞ்சநேயர்.
சித்திரம் : ஆர். பி. பாபுநாத்.

2-வது — உத்சவர் — ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயில் மற்றும் திருத்தேர்.
— நாராயணவனம்.

3-வது — ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில் திருத்தேர் — திருப்பதி.

பின்னட்டையில : ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோயில் ராஜ கோபுரம் — திருப்பதி.

சிறப்பாசிரியர் .
திரு. சி.ஏச். வெங்கடபதிராஜு
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர்
திரு. நே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு ;
EDITOR,
“ Sapthagiri ”
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

வேதங்கள், உபநிடதங்கள், இதிகாசங்கள், புராணங்கள் யாவும் இறைவனின் மேன்மையினையும், பக்தியின் சிறப்பினையும் படம் பிடித்துக் காட்டுவன மட்டுமின்றி, அப் பரமனின் பெருமையினூடே, நடைமுறை வாழ்க்கையில் மனிதன் மேற்கொள்ள வேண்டிய பண்பு நலன்களையும், அவற்றின் முக்கியத்துவத்தையும் சுட்டிக் காட்டவே செய்கின்றன. இறைவனின் பெருமையைத் தெரிந்து கொண்ட நாம், அவ் இறைவனின் அன்பிற்குப் பாத்திரமாக நாம் நம்மைப் பண்படுத்திக்கொள்ளத் தவறி விட்டோம். இதனால் நம்மில் பலருக்குச் சமயமே கசந்தது. விளைவு, இறைவன் கல்லாகத் தெரிந்தான். பக்தி பித்தலாட்டமாகப் பேசப்பட்டது. ஒரு காலக் கட்டத்தில், இந்து சமயம் என்பது வாழ்க்கை இலக்கணம் என்பதை அறிந்தும்கூட, தான் கொண்ட பொய்மை வாதத்தினையே நிலைநாட்ட தனது உள்ளத்தையே அடகு வைக்கத் துணிந்தான். பிறரையும் தன் வழியில் தூண்டி விட்டான். கடவுள் நம்பிக்கையினை மூட நம்பிக்கையாகவும், கடவுளை நம்புபவர்களை முட்டாள்களாகவும் அழைத்த அவன், அவர்களையே மூலதனமாகக்கொண்டு, தன் பொருளாதார, அரசியல், சமூக வளர்ச்சிக்காக, தன்னையே வழிபடச் செய்தான். இதுதான் பகுத்தறிவாளர்களின் பாசறையில் பூத்த பல புதுமைப் பூக்களின் வரலாறாகும். ஆனால், வேதகாலந்தொட்டு, யுகயுகமாக பல கம்சர்களையும், ஹிரண்யர்களையும் இராவணாதியர்களையும் கண்ட இந்து மதம், இவர்களை ஒரு முட்டுக்கட்டைகளாக நினைக்கவேயில்லை. மாறாக, தன் வளர்ச்சியின் படிக்கட்டுகளாக ஏற்றுக் கொண்டது. ஆகவே இப்புதுமைப் பூக்கள் யாவும் வெறும் காகிதப் பூக்கள்தாம்.

ஆனால் இந்து மதத்திற்குக் கேடு, இறைவனையும், அவன் பக்தர்களையும் நேரிடையாகத் தாக்கும் இந்தப் பகுத்தறிவு கும்பல்களால் நேர்ந்திடவில்லை. இந்து சமயத்தவர் எனக் கூறிக்கொண்டு அச் சமயத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளாது, கடவுளை வணங்குவதையும், சமய விழாக்களைக் கொண்டாடுவதையும் தங்கள் வாழ்க்கையில் ஒரு சடங்காக ஏற்றுக் கொண்டவர்களால்தான், நேரிட அதிக வாய்ப்புண்டு. ஒரு கட்டிடத்தின் பாதுகாப்பு, அதனை இடிக்காமல் இருப்பதனால் மட்டுமே ஏற்பட்டு விடாது. அதனைச் சரிவர பராமரிப்பு மேற்கொள்வதில்தான் அடங்கியுள்ளது.

இந்து சமயத்தின் பெருமை பேசும் சமய இலக்கியங்களில் ஒன்றாக விளங்குவது காகுத்தனின் கதை பேசும் இராம காதையாகும். இக்காவியத்தில் நம்மை பலமுறை நினைக்கத்தூண்டும் பாத்திரங்களில் முக்கியமான ஒன்றாகத் திகழ்வது அனுமனின் பாத்திரப் படைப்பு. காவிய நாயகனான இராமனை ஒரு அவதார புருஷனாக கவிஞன் காட்டிடும் போது அனுமன் நமக்கு ஒரு இலட்சிய புருஷனாகக் காட்டப்படுகிறான். இராமன் உள்ளிட்டுப் பல பாத்திரங்கள் பல நிறை குறைகளைக் கொண்டு விளங்கிடும்போது, அனுமன் மட்டும் நிறைகளை மட்டுமே கொண்டு ஒரு நிறைகுடமாக விளங்குகின்றான். ''இராமாயண மகா மாலா ரத்ன''மான அனுமனைத் தலைவனாகக் கொண்ட சுந்தரகாண்டம் அவனது பெருமை பேசும். ''நவ வியாகரண பண்டித''னாகவும், 'சர்வ மந்திர தந்திர யந்திர ஸ்வரூபி'யாகவும் இராமனால் புகழப்படும் ஆஞ்சநேயன், புத்திபலம், மனோபலம், ஆத்மபலம், தேக பலம், பிராணபலம், சம்பத்பலம் போன்ற மானிட வெற்றிக்கு வழிகோலும் அரும் பண்புகளைப் பெற்றதால்தான், இன்று இந்து சமயத்தின் எல்லாப் பிரிவினரும், அரசமரத்து விநாயகருக்கு ஒப்ப, ஊர்தோறும் கோயில்கள் கட்டி அச்சொல்லின் செல்வனைப் புகழ்ந்தேத்துகிறார்கள் போலும். பஞ்சபூதங்களை மட்டுமன்றி, பஞ்சேந்திரியங்களையும் அடக்கிய அவ் ஜிதேந்திரன், ஸ்மிருதி, த்ருதி, மதி, தாக்ஷயம் போன்ற பண்புக்கூறுகளின் உறைவிடமாக இருந்ததினால்தான் அவனை அப்பரம்பொருள், தன் முதல்தொண்டனாக ஏற்றுக்கொண்டான் போலும்.

சீரழிந்து வரும் இன்றைய அரசியல் தெளிவுக்கு ஒரு விடிவெள்ளியாக அனுமனின் பாத்திரம் விளங்குகிறது என்று கூறலாம். இன்று நிலவும் அரசியல் அநாகரிகத்திற்கு அடிப்படைக் காரணங்கள் பதவி வெறி, நேர்மையின்மை ஆகியவைதாம். இன்றைய மக்களாட்சி அரசியலில் இக்குறைகளைக் கொண்ட ஒரு சில அரசியல்வாதிகளும் அங்கமாகத் திகழ்வதால் இவர்களை விலகிச் செல்வது முடியாததொன்றாகும். அவர்களால் திருந்தினாலொழிய இதற்கு ஒரு மாற்றம் கிடைக்கும் என்று நம்புவது ஒரு பகற்கனவேயாகும். இவர்கள் ஒருமுறை அனுமனின் பாத்திரப்படைப்பின் அருமையினையும் பெருமையினையும் அறிந்து தெளிந்தால், அதுவே இந்து சமயத்தின் வெற்றிக்கு வழிகோலுவதாகும். ஒரு தலைவனுக்குரிய பண்புகள் எல்லாம் இருக்கப்பெற்றும், இறுதி வரை ஒரு சாதாரண தொண்டனாக அனுமன் விளங்கியதை உணர்தல் அவசியம். ஒரு அமைப்பின் வெற்றிக்கு வழி அமைப்பது அதன் தலைவனென்றாலும், அவ் வெற்றி நீடித்திருக்கும் வகையில் அத் தலைவனைத் தேர்ந்தெடுக்கும் பெருமையும் உரிமையும் அவ்வமைப்பின் தொண்டனுக்கே உரியது. தலைவன் இட்ட கட்டளையை சிந்தனை, சொல், செயல் ஆகியவற்றின் மூலம் ஒருமுகப்படுத்திப் பொறுமையுடனும், பொறுப்புடனும், மதிநுட்பத்துடனும் நிறைவேற்றிய அனுமனின் செயல்திறன் எல்லோரிடமும் அமைய வேண்டிய ஒன்றாகும். இராவணனையே கொல்லும் ஆற்றல் இருந்தும் அசோகவனத்தை மட்டும் அழித்தது, அதன்மூலம் தன தலைவனின், தான் சார்ந்த அமைப்பின் திறத்தைக் கோடிட்டுக்காட்டி, எதிரியைத் திருத்தவேயாம். கொண்ட கடமையினின்று தவறிய தன் தலைவன் சுக்ரீவனையே தட்டிக் கேட்ட அனுமனின் செய்கை, ஒரு நல்ல அமைப்பின் வெற்றிக்கு ஒரு எடுத்துக்காட்டு.

அனுமனின் புகழ் பாடும் சுந்தரகாண்டத்தினை ஜீவாத்மா பரமாத்மா யோகம் என்ற ஒரு தத்துவநோக்கோடு பார்ப்போமாயின், உண்மையான ஆனந்தம் எனும் இராமன் அருகு இருக்கும்போது தொலைவில் இருக்கும் மறையும் இன்பமான பொய் மானை, இந்த ஜீவாத்மாவான சீதை விரும்ப, அதனால் இந்திரியங்களால் அலைக்கழிக்கப்படும் அசோகவனத்தில் இருக்க வேண்டியதாகி விட்டது. பிரிந்த அந்த ஜீவனுக்கு, அப் பரமாத்மாவின் ஸ்வரூப இலட்சணங்களை விளக்கி, அவற்றை இணைக்கும் ஓர் ஆசார்யனாக அனுமன் விளங்குவது தெரியும்.

**இவ்வகையில் நட்பு, தொண்டு, கடமை, பொறுமை, மதிநுட்பம் ஆகிய நற்குணங்களின் பிறப்பிடமாகவும் உறைவிடமாகவும் விளங்கும் அனுமனது பாத்திரம் என்றென்றும் நம் நெஞ்சில் நிழலாட வேண்டியதொன்றாகும். இதனை மறந்தால், நாம் நம் வாழ்நாளில் என்றென்றும் மன்னிக்கப்படவே மாட்டோம்.**

# பஞ்சாங்கத்தின் சிறப்பு

திரு. பி. ரவீந்திரன் பி.ஏ.,-திப்பிராஜபுரம்

திதி, வாரம், நட்சத்திரம், கரணம், யோகம் என்ற ஐந்து அங்கங்களை உடையது பஞ்சாங்கமாகும். திதியைப் பற்றி நினைப்பது செல்வத்தையும், வாரத்தின் கிழமைகளைப் பற்றி சிந்திப்பது ஆயுள் வ்ருத்தியையும், கரணம் காரிய சித்தியையும், யோகம் ரோக நாசத்தையும் அளிக்கும் என்று சாஸ்திரம் கூறுகிறது. இதனுல்தான் வருடப் பிறப்பன்று பஞ்சாங்க படனம் செய்யும்படி நம் முன்னேர்கள் வகுத்துள்ளனர். நட்சத்திரங்கள் இருபத்தேழையும் மூன்று பகுதிகளாக்கி ஒன்பது கிரகங்களும் ஆட்சி புரிகின்றன. உதாரணமாக அசுவதி, மகம், மூலம் ஆகிய மூன்று நட்சத்திரமும் கேதுவுக்கும், பரணி, பூரம், பூராடம், மூன்றும் சுக்ரனுக்கும் உரியவை ஆகும். சாஸ்திரங்கள்,

"திதே ச ச்ரியமாப்னேதி வாராத்
ஆயுஷ்ய வர்த்தனம்
கரணுத் கார்யஸித்திம் ச யோகாத்
ரோக நிவாரணம்"

என்று கூறுகிறது. இதேபோல் நட்சத்திரங்கட்கும் தனிச்சிறப்பு உண்டு.

இருபத்தேழு நட்சத்திரங்கட்கும் தனித்தனியே அதிதேவதைகள் உண்டு. அசுவினீ அசுவினி தேவர்களையும், பரணி யமனையும், கிருத்திகை அக்னியையும், ரோகிணி ப்ரும்மாவையும், மிருக சீரிஷம் ஸோமனையும், திருவாதிரை சிவபிரானையும் புனர்பூசம் அதிதியையும், பூசம் ப்ருஹஸ்பதியையும், ஆயில்யம் தெய்வீக சர்ப்பங்களேயும், மகம் பித்ரு தேவதைகளையும், பூரம் அர்யமா என்பவரையும், உத்தரம் பகனையும், ஹஸ்தம் ஸவிதாவையும், சித்திரை த்வஷ்டா என்பவரையும், சுவாதி வாயுவையும் அதிதேவதைகளாகக் கொண்டு விளங்கி வருகின்றன. விசாகம், கேட்டை இரண்டுக்கும் இந்திரனே அதிதேவதையாகும். தவிர அனுஷத்திற்கு மித்ரனும், மூல நட்சத்திரத்திற்கு ந்ருதி என்ற திக்பாலகரும், பூராடத்திற்கு ஜல தேவதையும், உத்திராடத்துக்கு விச்வதேவர்களும், திருவோணத்துக்கு விஷ்ணுவும், அவிட்டத்திற்கு அஷ்டவசுக்களும் சதயத்துக்கு வருணனும், பூரட்டாதிக்கு அஜைகபாதர் என்ற ருத்ரரும், உத்திரட்டாதிக்கு அஹிர்புத்தின்யர் என்ற ஏகாதச ருத்ரர்களில் ஒருவரும், ரேவதிக்கு பூஷா என்ற தேவதையும் அதிதேவதைகளாக விளங்கி வருகின்றன.

ஒரு குறிப்பிட்ட நட்சத்திரத்துக்குத் தெற்கிலோ அல்லது வடக்கிலோ சந்திரன் ஸஞ்சரிக்கும் தினத்தில் பூமியில் அந்த நட்சத்திர காலம் நடைபெறும் நட்சத்திரங்கள் ஒவ்வொன்றுக்கும் தோற்றத்தைக் கொண்டே பெயர் ஏற்பட்டது என்றும் கூறுவர். உதாரணமாக, ஆகாயத்தில், குதிரைத் தலை போன்ற அமைப்புடையது அசுவினி என்றும், நுகத்தடி போன்றது மகம் என்றும், ஓடம் போன்றது புனர்பூசம் என்றும் கூறப்படுகிறது. பூரமும், பூரட்டாதியும், கட்டில் காலைப்போல் வடிவம் உடையது என்றும், மீனைப் போன்றது ரேவதி என்றும், அம்புபோல் வடிவம் உடையது திருவாதிரை என்றும், சுவாலை போல் ஒளி வீசக் கூடியது கிருத்திகை என்றும், தோரண வாயிலைப் போல் அமைப்புடையது விசாகம் என்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. பொதுவாக இந்த இருபத்தேழு நட்சத்திரங்கள் தவிர அபிஜித் என்ற ஒரு தீமையைத் தரும் நட்சத்திரமும் வழக்கத்தில் இருந்து வந்ததை ஸ்ரீமத் பாகவதம் போன்ற சில நூல்கள் குறிப்பிடுகின்றன. நட்சத்திரத்துக்கான அதிதேவதைகள் பற்றிக் குறிப்பிடும்போது சில ஜோதிட நூல்கள் பூரத்திற்கு பார்வதீதேவியையும், அனுஷத்திற்கு லக்ஷ்மீதேவியையும், பூரட்டாதிக்கு குபேரனையும், உத்திரட்டாதி நட்சத்திரத்துக்கு காமதேனுவையும், விசாகத்துக்கு முருகனையும், ஹஸ்தத்திற்கு சாஸ்தாவையும் அதிதேவதைகளாகக் குறிப்பிடுகின்றன.

தவிர அசுவினி, பரணி, மிருகசீரிஷம், பூசம், விசாகம், அனுஷம், கேட்டை, திருவோணம், ரேவதி முதலிய நட்சத்திரங்கள் மூன்று மூன்றுகவும், பூரம், உத்திரம், அவிட்டம், பூரட்டாதி ஆகிய நட்சத்திரங்களும், உத்திரட்டாதியும் வடிவத்தில் நான்கு நான்கு நட்சத்திரங்களை உடையதாகவும், ரோகிணி, புனர்வசு, மகம் ஹஸ்தம் ஆகியவை ஐந்து நட்சத்திரங்களை உடையதாகவும், கார்த்திகை, ஆயில்யம், மூலம் ஆகிய மூன்றும் ஆறு நட்சத்திரங்களை உடையதாகவும், மற்றவை ஒரே நட்சத்திரமாகவும் வானவீதியில் அமைந்துள்ளன. ஜோதிஷ சாஸ்திரங்கள், என்னென்ன காரியத்துக்கு எந்தெந்த திதிகள், நட்சத்திரங்கள், யோகங்களில் தொடங்கினுல் எத்தகைய பலன்கள் என்று வகுத்துள்ளன.

அடுத்தபடியாக திதி என்றுல் என்ன என்று கவனிப்போம். ஆகாய மண்டலத்தில் சூரியனைச் சந்திரன் சந்தித்துப் பிறகு பிரிந்து செல்லும் ஒவ்வொரு பன்னிரண்டு டிகிரியும் ஒரு சுக்லபட்ச திதி ஆகும். சூரியனை நோக்கிச் சந்திரன் சந்திக்கச் செல்லும் ஒவ்வொரு பன்னிரண்டு டிகிரியும் ஒரு க்ருஷ்ணபட்ச திதி ஆகும். இதனுல்தான் அமாவாசையன்று பிறந்தவர்களின் ஜாதகத்தில் சூரியனும் சந்திரனும் ஒரே கட்டத்தில்

(45-ம் பக்கம் பார்க்க)



# கர்ப்ப ஸ்ரீமான்

திரு. லா. ஸ்ரீநிவாசன்—புது தில்லி.

**न वक्तुमपि शक्यते नरकगर्भवासादिकं** என்று ஸ்வாமி தேசிகன் அபீதிஸ்தவத்தில் அருளிச் செய்தார். பலவித நரகங்களிலும் கர்ப்பங்களிலும் வஸிப்பது முதலியவற்ருல் ஏற்படும் துக்கம் வாய்விட்டுச் சொல்லவும் தரமன்று என்றபடி. வாயால் கூறுவதே கஷ்டமென்ருல் அவற்றை அநுபவிப்பது எவ்வளவு சிரமம் என்பதை எளிதில் ஊஹித்துக் கொள்ளலாம். **तेन प्राप्तं गर्भवासादि दु:ख** என்று முகுந்த மாலை ஆசிரியரும் அருளினர். நாராயணனின் நாமத்தை உச்சரித்துப் பாபிகளும் தங்கள் விருப்பங்களை அடைந்தனர்; அதில் வாக்கு செல்லாததால் கர்ப்பவாஸம் முதலிய துக்கங்கள் நம்மால் அடையப்பட்டிருக்கின்றன என்றபடி.

ஸ்வாமி தேசிகன் நரகத்தையும் கர்ப்ப வாஸத்லையும் சேர்த்து அருளியதிலிருந்து கர்ப்ப வாஸம் நரகதுல்யம் என்பது பெறப்படும். **मांस-सृक्पूय** என்ற ச்லோகத்தில் ஸ்ரீவிஷ்ணு புராணம் 'மாம்ஸம், ரத்தம், சீ, விஷ்டை, மூத்திரம், நாடிகள், எலும்பின் ஸாரம், எலும்பு இவைகளுடைய சேர்க்கையான தேஹத்தில் ஒருவன் ப்ரியத்தையுடையவனுக இருந்தானேயாகில் அந்த மூடன் நரகத்திலும் ப்ரீதியுள்ளவனுக இருக்கக் கடவன்' என்று கூறுகிறது. சரீரமே நரகத்து சமம் என்ருல் அதில் கர்ப்பவாஸமும் அப்படிப்பட்டதே என்பது கூருமலே தெரியவரும்.

'கர்ப்ப வாஸம் முதலியவை' என்று ஸ்வாமி தேசிகன் அருளியதினுல் 'வேத நூல் பிராயம் நூறு மனிதர் தாம் புகுவரேலும், பாதியும் உறங்கிப் போகும் நின்றதில் பதினையாண்டு, பேதை பாலகனதாகும் பிணி பசி மூப்புத் துன்பம்' என்று தொண்டரடிப் பொடி ஆழ்வார் அருளிய பிறவிக்குப்பின் உண்டாகும் துக்கங்களையும் ஆசார்யர் கருத்தில் கொண்டுள்ளார் என்பது விளங்கும்.

மேற்கூறிய ஆழ்வார் பாசுரத்தில் 'புகுவரேலும்' என்ற விடத்திற்குப் பெரிய வாச்சான்பிள்ளை வ்யாக்யானம் வருமாறு: 'முதலிலே புகுவாரில்லை; கர்ப்பத்திலே முடிதல், ஜநியாநிற்க முடிதல், பிறந்து முடிதல், நாலு நாளிருந்து முடிதல், பால்யத்திலே முடிதல், செருக்கித்திரியும் யௌவனத்திலே முடிதல், ஜரையிலே முடிதலாய் மரணத்தை நிர்ணயிக்க அரிதாயிறே இருப்பது.' இதற்கு மேற்கோளாக **गर्भे विलीयते भूयः** என்ற ஸ்ரீ விஷ்ணு புராண ச்லோகத்தையும் காட்டியுள்ளார். ஆக, கர்ப்பத்திலேயே மாண்டு போவதுமுண்டு என்று தெரிவித்தபடி.

கர்ப்பத்தில் சிசு படும் கஷ்டங்களை ஸ்ரீ விஷ்ணு புராணம் ஆரும் அம்சம் ஐந்தாம் அத்யாயம் விரிவாகக் கூறுகிறது. ஸ்ரீமத் பாகவதத்திலும் கபிலர் தமது தாயாருக்குக் குழந்தையின் கர்ப்பவாஸ அவஸ்தையைத் தெளிவாகத் தெரிவித்துள்ளாா.

ஸ்வாமி தேசிகன் ஸ்ரீ பரமபத ஸோபாநத்தில் விரக்தி பர்வத்தில் கர்ப்போபநிஷத் முதலிய பல ப்ரமாணங்களை எடுத்துக் காட்டி இவ்விஷயத்தை மூதலித்துள்ளார். சுருங்கச் சொன்னுல் கர்ப்பத்திலிருக்கும் குழவி முதுகு, கழுத்து இவற்றின் எலும்புகளை வளையும்படி மடக்கிக் கொண்டு, கை கால்களை நீட்டவும் மடக்கவும் முடியாத நிலையில் முடங்கிக் கிடக்கிறது. தாய் உட்

# பரிதிக்கு ஒரு பாட்டு!

மகா பாரதத்தில் சாம்பன் தவம் செய்தபோது ஸூர்ய பகவான் ப்ரத்தியக்ஷமாகிக் கூறுகிறார்:

"ஸஹஸ்ர நாமத்தால் என்னைத் துதிக்க வேண்டிய அவசியம் இல்லை. நான் என்னுடைய மிகவும் ரகசியமும் மிகவும் புனிதமுமான சுபத்தை அளிக்கவல்ல இருபத்தொரு பெயர்களை மட்டும் உனக்காகக் கூறுகிறேன். அவற்றை மட்டும் ஜபித்தாலே போதுமானது. இதனால் ஸஹஸ்ர நாமங்களும் படிப்பதால் உண்டாகும் பயன் உண்டாகும். இந்த இருபத்தொரு பெயர்களைக் கொண்ட ஸ்லோகம் மூவுலகிலும் ப்ரசித்தமானது. எவன் இந்த ஸ்லோகத்தை காலையிலும் மாலையிலும் படிக்கிறானோ அவன் எல்லாவிதமான பாவங்களிலிருந்தும் விடுபடுவான். வ்யாதியால் பீடிக்கப்பட்டிருந்தாலும் அவற்றினின்றும் விடுபட்டுச் செல்வங்களைப் பெற்று, ஆரோக்கியத்துடன் மழலைச் செல்வங்களையும் பெற்று இன்புறுவான்".

ஸூர்ய பகவானுடைய 21 பெயர்கள் கொண்ட ஸ்லோகம்.

**ஓம் விகர்த்தனோ விவஸ்வாம்ஸ ச**
**மார்த்தாண்டோ பாஸ்கரோ ரவி: |**
**லோகப்ரகாசக: ஸ்ரீமாந் லோகசக்ஷுர்**
**க்ரஹேச்வர: ||**
**லோக ஸாக்ஷீ த்ரிலோகேச: கர்த்தா**
**ஹர்த்தா தமிஸ்ரஹா |**
**தபனஸ் தாபனஸ் சைவ சுசி:**
**ஸப்தாச்வவாஹன: ||**
**சுபஸ்திஹஸ்தோ ப்ரஹ்மாச**
**ஸர்வ தேவ நமஸ்க்ருத: ||**

தொகுப்பு: ஆர். சத்தியமூர்த்தி-கடலூர்.

கொள்ளும் கடுமையான காரம், புளிப்பு முதலிய ரஸங்களால் தாக்கப் பட்டு மிக்கத் துன்பத்தை அடைகிறது. மல மூத்திரங்களான சேற்றில் படுத்துக்கொண்டு, கிருமிகளால் கடிக்கப்பட்டு, மூச்சு விடவும் முடியாமல் கஷ்டத்தையே அநுபவிக்கிறது. பிறக்கும்போது இந்த ஜீவன்படும் துன்பங்களும் விவரிக்க வொண்ணுதவை. **गर्भेषु निर्भर** என்ற ஸ்ரீ வைகுண்ட ஸ்தவ ச்லோகத்தில் கூரத்தாழ்வான் வருமாறு அருளியுள்ளது கவனிக்கத் தக்கது; 'சிறியவையும் பெரியவையுமான எல்லாப் பிராணிகளின் கர்ப்பங்களிலும் மிகவும் நெருக்கமான இடத்தில் உறைந்திருப்பதால் வருந்திய உடலையுடையவனும் அடியேன் மேன்மேலும் பல்லாயிரக்கணக்கான பிறவிகளை எண்ணிப் பார்த்து, இவ்விஷயத்தில் ஒரு மறுமாற்றமும் அறியாதவனாய் அழிந்துவிட்டவனைப் போன்று ஊழலாடி வருகின்றேன்.' அவர் திருக்குமாரரான ஸ்ரீ பராசர பட்டரும் 'ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் **गर्भजन्मजरामृति** என்ற ச்லோகத்தில், 'அரங்கநாதனே! கர்ப்பவாஸம், உற்பத்தி, முதுமை, மரணம், துக்கம், புண்ய பாபரூப கர்மம் என்ற ஆறு அலைகளை அடைந்தவனான அடியேன் பெரிய பிராட்டியாருக்குத் தக்கவரான தேவரீரை, நாயானது இந்திராதி தேவர்களுக்கான 'வஷட்' என்றதால் ஸம்ஸ்க்ருதமான புரோடாசத்தை விரும்புவதைப் போல், ஆசைப்பட்டேன்' என்று அருளியுள்ளார்.

கர்ப்பத்தில் சிசு பலவித கஷ்டங்களை அநுபவித்த போதிலும் அதன் அறிவு மட்டும் அழியாமலிருப்பதால், அது தனது முற்பிறவிகளை நினைத்து வருந்தி, தனது வினையினாலேயே தான் கட்டுண்டிருப்பதை அறிந்து மிக்க வேதனையடைந்து, இனியேனும் நல்ல கதியை யடைய வேண்டும் என்று உறுதி கொள்கிறது. ஆனால் பிறந்ததும் வெளிப்புறத்திலிருக்கும் சடம் என்ற வாயு இந்த ஜீவன் மீது பட்டதும் இவனுக்கு கர்ப்பவாஸத்திலிருந்த விவேகம் முழுவதும் அழிந்து விடுகிறது. நம்மாழ்வார் ஒருவரே இந்த சடவாயுவை ஹூங்காரத்தினால் ஜயித்தார். ஆகவே அவருக்கு சடஜித், சடகோபன் என்ற திருநாமங்கள் உண்டாயின.

'பேயிருக்கும் நெடு வெள்ளம் பெரு விசும்பின் மீதோடிப் பெருகு காலம், தாயிருக்கும் வண்ணமே உம்மைத் தன் வயிற்றிருத்தி உய்யக் கொண்டான்' என்பது திருமங்கை மன்னன் திருவாக்கு. 'மனிதர் ஒருவருமில்லாதபடி பேய் பிசாசுகளே இருக்க வேண்டும்படியான மஹாப்ரளய வெள்ளமானது ஆகாசத்தின்மீது வழிந்தோடி ப்ரவஹித்த காலத்தில் பெற்ற தாய் போலே பாரித்து உங்களைத் தன் திருவயிற்றிலே 'இருக்க வைத்துக் காப்பாற்றிய பெருமான்' என்று எம்பெருமானை ஆழ்வார் வர்ணிக்கிறார். தாய் எவ்விதம் தன் கர்பபத்திலுள்ள சிசுவைக் காப்பாற்றுகிறாளோ அதுபோல் எம்பெருமான் உலகத்தைத் தன் உதரத்தில் வைத்து ரக்ஷித்தான் என்றபடி.

**यो मे गर्भगतस्यापि वृत्ति कल्पितवान् प्रभुः ।**
**शेषवृत्तिविधानेऽपि किं सुप्तोऽथवा मृतः ॥**

என்கிறது ஸ்ரீ விஷ்ணு தர்மம். 'எந்த ப்ரபு நான் தாயின் கர்ப்பத்திலிருக்

கும்போதுகூட பிழைக்கும் வழியைச் செய்தானோ, பிறந்த பிறகு என் பால் யாதி அவஸ்தைகளிலும் எனக்குப் பிழைக்கும் உபாயத்தைச் செய்யும் விஷயத்தில் அவன் தூங்குகிறனோ அல்லது இறந்துவிட்டானோ?' கர்ப்பத்திலே காப்பாற்றியவன் பின்னும் காப்பாற்றாமல் விடமாட்டான் என்றபடி. ஆக, ஸகல உலகங்களையும் தன் திரு வயிற்றில் வைத்துக் காப்பது போல ஒவ்வொரு சிசுவையும் எம்பெருமான் அது கர்ப்பத்திலிருக்கும்போது ரக்ஷிக்கிறான் என்று கூறப்பட்டதாகிறது.

தண்டகாரண்ய ரிஷிகளும் சக்ரவர்த்தித் திருமகனிடம் இவ்விதம் விண்ணப்பம் செய்து கொண்டனர்:

**न्यस्तदण्डा वयं राजन् जितक्रोधा जितेन्द्रियाः।**
**रक्षितव्या त्वया शश्वत् गर्भभूतास्तपोधनाः॥**

'அரசே! ராக்ஷஸர்கள் விஷயத்தில் சபித்தல் முதலிய தண்டனைகளை விட்டிருப்பவர்களும், கோபத்தை வென்றிருப்பவர்களும், இந்த்ரியங்களை ஜயித்திருப்பவர்களும், தவத்தையே தனமாகக் கொண்டவர்களும், உமக்கு கர்ப்பம் போன்றவர்களாயுமுள்ள நாங்கள் உம்மால் எப்போதும் காப்பாற்றத்தக்கவர்கள்' என்றபடி. இதற்கு ஈடு (5-10-4) அளிக்கும் விளக்கம் வருமாறு. 'தம் தாம் கைம் முதலழிய மாறாதே இருக்குமவர்கள் தபோதனர்களாயிருக்கச் செய்தே கர்ப்ப பூதராயிருப்பவர்கள். தந்தாமுக்கென்ன இயற்றியுண்டாயிருக்கச் செய்தே கர்ப்ப வாஸத்தில் ஜநநி யறிந்து ரக்ஷிக்குமத்தனையிறே. அப்படியே அவனே யறிந்து ரக்ஷிக்க இருக்குமவர்கள்.' கர்ப்பத்திலிருக்கும் சிசுவுக்குத் தான் என்ற இருப்பு இருந்த போதிலும் அது எப்படி தன்னை ரக்ஷிக்கத் தாயையே எதிர்பார்க்குமோ, அதே போல் தங்களுக்குத் தபோ வலிமை இருந்த போதிலும் எம்பெருமானே தங்களைக் காக்க வேண்டுமென்று இருப்பவர்கள் தண்டகாரண்ய ரிஷிகள் என்றபடி. தனிகன் எப்படி தனத்தைச் செலவு செய்ய விரும்ப மாட்டானோ அது போலவே மஹர்ஷிகளும் தாங்கள் மிகவும் சிரமப்பட்டு ஸம்பாதித்த செல்வமான தவத்தை செலவிட விரும்பமாட்டார்கள் என்றும் காட்டியபடி.

ஆக, பகவன் பொதுவாக யாவகையும், விசேஷித்துத் தமது பக்தர்களையும், தாய் தனது கர்ப்பத்தைக் காப்பதுபோல் ரக்ஷிக்கிறான் என்று கூறியதாயிற்று.

அப்படிப்பட்ட எம்பெருமான் **पितर रोचयामास** என்றபடி தன் குழந்தைகளில் ஒருவரைத் தனக்குத் தகப்பனாராக வரித்துத் தனது ஸௌலப்யத்தினால் அவதாரம் செய்கிறான்.

**प्रादुर्भवति लोकानां पावनार्थं स्वलीलया ।**
**नैष गर्भत्वमापेदे न योन्यामवसत्प्रभुः ॥**

என்று இதை பாரதம் விளக்கியது. 'ஸர்வ ஸ்வாமியானவன் உலகத்திலுள்ள பிராணிகளின் ரக்ஷணத்தின் பொருட்டுத் தன்னுடைய இச்சையிலுண்டான லீலையால் அவதரிக்கிறான். இந்த க்ருஷ்ணன் கர்ப்ப வாஸம் செய்யும் தன்மையை அடையவில்லை, யோனியிலும் வஸிக்கவில்லை' என்றபடி. தங்களுக்குப் பிள்ளையாகப் பிறக்க வேண்டுமென்று வரம் வேண்டிய தேவகீ வஸுதேவர்களுக்கு மூன்று ஜன்மங்களில் எம்பெருமான் தனது ஸங்கல்பத்தினால் புத்ரனாக அவதரித்தான். நம்மைப் போல் இவனுக்கு ப்ராக்ருத ஜன்மமும் கர்ப்ப வாஸமும் கிடையாது. அப்ராக்ருத திவ்ய தேஹத்துடனேயே அவதரிக்கிறான். **जन्म कर्मच मे दिव्यं** 'எனது அவதாரமும் லீலைகளும் எல்லாம் தெய்வீகமானவை' என்று கண்ணபிரானும் கீதையில் அறுதியிட்டான். சர்க்கரைப் பொங்கலைச் சாப்பிட்டவன் நெய் பிசிக்கு போவதற்குத் தனது கைகளை சீக்காய்ப் பொடியால் அலம்பிக் கொள்கிறான். ஆனால் தனது நாக்கை அவ்விதம் அலம்பிக் கொள்வதில்லை. ஏனெனில் நாக்கில் பிசிக்கு ஒட்டுவதில்லை. ஒரு சரீரத்திலேயே ஒரு பாகத்தில் ஒட்டுவது மற்றொரு பாகத்தில் ஒட்டுவதில்லையென்றால், ப்ராக்ருத சிசுவின் சரீரம் கர்ப்பத்திலுள்ள மலங்களால் அசுத்தமாவது போல் எம்பெருமானின் அப்ராக்ருத திவ்யதேஹம் அசுத்தமாவதில்லை என்பதை எளிதில் அறியலாம்.

அடுத்தபடியாக அசுத்தமான கர்ப்பத்தில் எம்பெருமான் ஏன் வஸிக்க வேண்டுமென்ற கேள்வி எழுகிறது.

**अङ्गुष्ठमात्रः पुरुषो मध्ये आत्मनि तिष्ठति ।**
**ईशानो भूतभव्यस्य न ततो विजुगुप्सते ॥**

'முக்காலத்திற்கும் தலைவனான எம்பெருமான் தன்னை த்யானம் செய்யத் தகுதியுள்ள ஜீவர்களின் ஹ்ருதயத்தில் அவர்கள் ஸௌகர்யத்துக்காக அவர்களின் கட்டை விரல் அளவு உள்ளவராய் அவர்களிடமுள்ள வாத்ஸல்யத்தால் வஸிக்கிறான். ஆகையால் அசுத்தமான அவர்களின் சரீரத்தைக் கண்டு அருவருப்பதில்லை' என்று ச்ருதி கூறுகிறது. சேற்றில் விழுந்த குழந்தையைக் காப்பாற்ற எப்படி அதன் தாய் தயங்காமல் அந்த சேற்றில் குதிப்பாளோ, அதே போல் இந்த அசுத்த சரீரத்தில் விழுந்த ஜீவனை ரக்ஷிக்கும் பொருட்டு எம்பெருமானும் அந்த சரீரத்தில் அருவருப்பில்லாமல் ப்ரவேசிக்கிறான் என்று இங்குப் பெரியோர் பகர்வர். எல்லோர் ஹ்ருதயத்திலும் இருப்பது போல் சிலருடைய கர்ப்பத்திலும் வாஸம் செய்கிறான். இந்த கர்ப்ப வாஸம் பக்தர்களின் பிரார்த்தனையின்படியும் தனது விருப்பப்படியும் என்பது ஏற்கனவே விளக்கப்பட்டுள்ளது.

செல்வத்துக்கெல்லாம் அதிதேவதை பிராட்டி என்ற ஸ்ரீ. அந்த ஸ்ரீயைத் தனது பத்னியாக உடையவனாகையால் எம்பெருமான் ஸ்ரீமான். உண்மையில் இவனே ஸ்ரீமான். மற்றவர்களை ஸ்ரீமான் என்பது உபசார வழக்கு. இவன் என்றும் எங்கும் ஸ்ரீமானே. ஆகவே திருவின் மணாள

ஞன பகவான் தன் இச்சைப்படி கர்ப்ப வாஸம் செய்யும்போது அவனை கர்ப்ப ஸ்ரீமான் என்று கூறத்தட்டில்லை.

ஒருவன் ஏழைக் குடும்பத்தில் பிறந்து பிற்கு தானே ஸம்பாதித்துச் செல்வந்தனுகிருன். மற்ெருருவன் தனிகரின் குடும்பத்தில் பித்ரார்ஜிதத்தில் உரிமையுடன் பிறக்கிருன். இவ்விதம் சிறப்பாகப் பிறப்பவனை கர்ப்ப ஸ்ரீமான் என்பது உலக வழக்கு.

ஆயினும் செல்வம் என்பது அவரவர் மனப்பான்மைப்படி வெவ்வேருக இருக்கும். யோகிகள் தங்கள் யோகத்தையே சிறந்த செல்வமாக மதிப்பர். பகவத் கீதையில் யோகத்திலிருந்து நழுவினவனின் கதி யாது என்று அர்ஜுனன் வினவ அதற்குக் கண்ணபிரான் இரண்டு ச்லோகங்களால் விடை கூறுகிருன்.

प्राप्य पुण्यकृतां लोकानुषित्वा शाश्वतीस्समाः।
शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टोऽभिजायते ॥
अथवा योगिनामेव कुले भवति धीमताम् ।
एतद्धि दुर्लभतरं लोके जन्म यदीदृशम् ॥

'யோகத்தைத் தொடங்கியவுடன் அதிலிருந்து நழுவியவன் யோக மாஹாத்ம்யத்தாலேயே மிக்க புண்ணியம் செய்தவர்கள் அடையும் நல்ல உலகங்களை அடைந்து அங்குள்ள போகங்களில் திருப்தி ஏற்படும் வரையில் நீண்ட காலம் அவ்வுலகங்களில் வாழ்ந்து பரிசுத்தியுள்ளவர்களாய் குணநலச் செல்வம் நிறைந்தவர்கள் வாழும் சிறந்த வீட்டில் பிறக்கிருன். அன்றிக்கே யோகிகளுடையதேயான பெரிய குலத்தில் பிறக்கிருன். இந்த இரண்டு விதமான பிறப்பும் இவ்வுலகில் மக்களுக்கு மிகவும் கிடைத்தற்கரிதன்ருே.' ஆக, யோகத்தையே செல்வமாகக் கொண்டு பிறக்கும் இவர்கள் கர்ப்ப ஸ்ரீமான்கள் என்பதில் குறையொன்றுமில்லை.

முதலையினுல் கவரப்பட்டு பிராணன் போகும் தருவாயிலிருந்த கஜேந்திராழ்வானை नागवर:श्रीमान् என்ருர் மஹர்ஷி. அந்த யானைக்கு அப்போது என்ன செல்வமிருந்தது? தன் சரீரம் என்றேனும் ஒரு நாள் அழியக் கூடியதாகையால் அதற்காக அது கரையவில்லை. தான் பரித்த புஷ்பத்தை வாடாமல் எம்பெருமானின் திருவடிகளில் ஸமர்ப்பிக்க வேண்டும் என்ற பக்தியான செல்வமே அதனிடம் மிகுதியாக இருந்தது. இந்த பகவத் பக்தி ப்ரஹ்லாதாழ்வானுக்குக் கர்ப்பத்திலேயே இருந்தது. அவனதுதாயான கயாதுவுக்கு நாரதர் பகவத் கதைகளை உபதேசித்து வந்தார். கர்ப்பவதியாயிருந்ததால் அவள் பாதியில் அயர்ந்து தூங்கிவிடுவாள். ஆனுல் அவள் வயிற்றிலிருந்த ப்ரஹ்லாதன் ஊம் கொட்டிக் கொண்டு கேட்டுக் கொண்டிருந்தானும். இவ்விதம் கேட்டதினுலேயே அவன் சிறந்த பகவத் பக்தனுகி மற்ற குழந்தைகளுக்கும் உபதேசிக்கலானுன். ஆக பக்திச் செல்வத்துடன் கர்ப்பத்திலிருந்த இந்த குழவியை சிறந்த கர்ப்ப ஸ்ரீமான் எனலாம்.

**लक्ष्मणो लक्ष्मिसंपन्न:** என்று இலக்ஷ்மணன் இராமனுக்குக் கைங்கர்யம் செய்யும்படியான ஸம்பத்துடன் பிறந்ததாக வால்மீகி உரைத்தார். விபீஷணன் தன் நாடு, வீடு, மனைவி யாவற்றையும் துறந்து இராமனைச் சரணமடைய ஆகாயத்தில் துணையற்று நின்றபோது அவரை **अन्तरिक्षगत: श्रीमान** என்ருர் அதே வால்மீகி. அந்த நிலையில் அவனுக்கு என்ன ஐச்வர்யமிருந்தது? இராமனைச் சரணமடைந்து அவனுக்குக் கைங்கர்யம் செய்ய வேண்டுமென்ற மனேரதம் ஒன்றே. அது பிறகு கைகூடியது. அதற்காகவே அவர் இட்டுப் பிறந்தார். இவ்விதம் கைங்கர்ய ஸ்ரீயுடன் பிறந்த அவரையும் கர்ப்ப ஸ்ரீமான் என்பது தகும்.

ரிஷி வாமதேவர் கர்ப்பத்திலிருக்கும்போதே பேசும் சக்தி படைத்திருந்தார். அவர் தமக்கு ப்ரஹ்ம ஜ்ஞானம் உள்ளது என்பதை இந்திரன் முதலானேர்க்கு வெளிப்படுத்தினுர். ப்ரஹ்ம ஜ்ஞானத்தைவிட சிறந்த செல்வம் உலகில் கிடையாதாகையால் அவர் சிறந்த கர்ப்ப ஸ்ரீமான் ஆவார்.

பகவான் யாவரையும் ப்ரளயத்தில் காப்பாற்றினுலும், பொதுவாக யாவரையும் கர்ப்பத்தில் பிழைத்திருக்கச் செய்தாலும், பரீக்ஷித்தைக் காத்ததைப் போல் ஒருவரையும் ரக்ஷிக்கவில்லை. உத்தரையின் கர்ப்பத்தில் சக்ராயுதத்தைச் செலுத்தி அச்வத்தாமாவின் அஸ்த்ரத்தைப் பயன்படாமல் செய்தார். மேலும் குழந்தை கரிக்கட்டையாக விழுந்ததும் தமது திருவடியால் ஸ்பர்சித்து அதை உயிர்ப்பித்தார். இப்படி ஸ்ரீமானுன பகவானுல் கர்ப்பத்தில் விசேஷமாக ரக்ஷிக்கப்பட்ட செல்வத்தையுடைய பரீக்ஷித்தைவிட சிறந்த கர்ப்ப ஸ்ரீமான் இல்லை எனலாம்.

இவ்விதம் பலர் பலவிதச் செல்வங்களுடன் பிறக்கும் மேன்மைகளைச் சிறிது அநுபவித்தோம்..

✳

---

## வெற்றிலைப் பட்டி மாலை

ஆதோனிக்கருகில் 15 மைலில் மார்லபண்டா என்கிற இடத்தில் பிரசித்தி பெற்ற அனுமன் ஆலயம் உள்ளது. வெற்றிலைப் பட்டியாலான மாலையை அணிவிப்பது விசேஷம். ஆந்திராவில் வெற்றிலைப் பட்டி மாலையை ஆஞ்சநேயருக்கு அணிவித்தால் நினைத்த காரியம் கைகூடும் என்ற நம்பிக்கையுள்ளது. இதற்கு ஆக்கு பூஜை என்று பெயர். (ஆக்கு என்ருல் வெற்றிலை)

---

# எம்மாடு சும்மாடு?

திரு. சி. முருகானந்தம் எம் ஏ.,
சென்னை-47.

கண்ணை இமைபோல் காத்து வளர்த்த தாய் எத்துணைச் சிறந்தவள்! எண்ணும் எழுத்தும் சொல்லித் தந்த தந்தை எத்துணை நல்லவர்! பெண்ணைக் கொடுத்துப் பெரிய குடியாக்கிய சுற்றத்தார் எவ்வளவு அன்பு கொண்டவர்!

சொந்தங்கள் துணையோடு சுகிக்கின்ற செல்வங்கள்தாம் எத்தனை! கார், பங்களா, கரையாத வங்கியிருப்பு, பட்டம், பதவி, பறை சாற்றும் விளம்பரங்கள், பொருள், புகழ், பொன், பெண்... ஓ, எத்தனை கோடி செல்வங்கள்! எத்தனை கோடி இன்பங்கள்!

...அத்தனையும் இருந்தென்ன? ஆயுள் கெடு முடிந்து அந்தகன் கைப்படும்போது அன்புத் தாய் - தந்தை வந்து அணைத்துக் கொள்ள முடியுமோ? உறவினர்கள் ஓடி வந்து உதவி செய்யக் கூடுமோ? உடல் கூட்டை விட்டுவிட்டு உயிர்ப் பறவைப் போகும் போது, மயல் கூட்டும் மனைவியும் மற்றையச் செல்வங்களும் உடன் வருமோ!

இன்பம் பொங்கும் இளமையும், எழில் பொங்கும் மேனியும், இந்த உலகமும், இதன்கண் வாழ்க்கையும் பொய்ப் பொருட்கள் அல்லவா? வாலிபம் முதுமையில் கரையும்; தேகம் நோயில் விழும். ஒரு நல்ல பொழுதில் கோழையால் குரல் அடைக்கும்; ஆவியார் ஆக்கை விட்டுப் போய் விடுவார்.

அகத்தார் அலறிக் கூடுவர். மாலை சூட்டி மயானத்தில் இடுவர். வெந்து தணியும் வரைகூட நில்லாது விறகால் தீ மூட்டி விரைந்து போய் விடுவர்.

தாய் அருமையானவள்தான்; தந்தை அன்பானவர்தான்! உடன் பிறந்தார், உற்ற தாரம், புத்திரர் எல்லாரும் நல்லவர்கள்தாம்! ஆனாலும் உயிர் போகும்போது எந்த உறவு வந்து தோள் கொடுக்கும்?

இளமையும், தேகமும், இன்பத்தைக் கொடுக்கும் இனிய செல்வங்களும் எத்தனையோ உண்டு இவ்வுலகத்தில். எனினும் இறப்பு வந்து பற்றும்போது 'எம்மாடு' - எந்தச் செல்வம் வந்து 'சும்மாடு' கோலும்?-சரிகின்ற உயிர்களைத் தாங்கிப் பிடிக்கும்?

நில்லாத இவற்றையெல்லாம் நிலையானதென்று உணருவது புல்லறிவன்றோ? பொல்லாத புலால் உடம்பைப் போற்றிக் காப்பது மயக்க உணர்வால் அல்லவோ? பொய் கோர்த்த மெய்யிதனை மெய்யென்று நம்புவது அஞ்ஞானம் அன்றோ?

எனவே, சீவன் முத்தர் சென்றது கருதார்; நாளைச் சேர்வது நினையார்; கண்முன் நின்றது பொசிப்பார். அவர் எவ்விடத்தும் பரம்பொருளையன்றி வேறொரு பொருளையும் காணுதல் இல்லை. பரம்பொருள் மெய்; பதார்த்தங்கள் பொய், செல்வங்கள் யாவும் செல்லும் நிலையின. திருவருளே உண்மையான செல்வம்.

அத்தகைய திருவருட் செல்வத்தைப் பெற்ற திருநாவுக்கரசு சுவாமிகள் எங்கும் சிவனையன்றி பிறிதேதுபொருளையும் காணுதவர்கள். சுற்றத் தொடர்பால் மயங்காது சுடர்ச் சோதியானை மனம் பற்றுமாறு ஓதியவர்கள்.

'தந்தை யார்? தாய் யார்? தாரமார்? புத்திரர் யார்?' என்ற தோடமையாது 'தாம் தாம் யாரே?' என்று வினவினுர்கள். தமக்கு இறுதி வந்த போது தம்மாலேயே ஒன்றும் ஆகாதே என்பதனுல் அவ்வாறு அருளிச் செய்தார்கள். மேலும், 'வந்தவாறு எங்ஙன்? போமாறு ஏது?' என்று நம் சிந்தனையைத் தூண்டுகிருர்கள். நாம் இவ்வுலகில் பிறந்தது இங்குப் பிணிப்புற்று நிற்கும் தாய்-தந்தை முதலியவரோடு முன்னேயும் கூடி நின்றோ? இறப்பது அவர்களோடு பின்னும் பிரியாது கூடி நிற்கவோ? அல்லது, அவரவர் முன்னும் தொடர்பற்று, பின்னும் சம்பந்தமற்றவர்களாய்ப் போய்விடவோ?

சன்மங்கள் தோறும் தாய்-தந்தை, தாரம் முதலானவர்கள் வேறு வேறு என்பதறியாமல் இப்போதுள்ள தாய்-தந்தையும், தாரமுமே நமக்கு உறுதி செய்பவர் போலக் கருதுகிறோம். ஓர்ந்துணர்ந்தால் அவை அனைத்தும் பொய்யே. ஆதலின் 'மாயமாம் இதற்கு ஏதும் மகிழ வேண்டா' என்றனர் மருள் நீக்கியார்.

எப்பாலும் நுன்னுணர்வே யாக்கி எங்கும் சிவமாய் இசைந்திருந்த சுவாமிகள், 'எம்மாடு சும்மாடு?' என்று நம்மைச் சிந்திக்க வைக்கிருர்கள்.

"எத்தாயர் எத்தந்தை எச்சுற்றத்தார்
எம்மாடு சும்மாடாம் ஏவர் நல்லார்?
செத்தால் வந்துதவுவார் ஒருவரில்லை
சிறுவிறகால் தீமூட்டிச் செல்லா
நிற்பர்
சித்தாய வேடத்தாய் நீடுபொன்னித்
திருவானைக் காவுடைய செல்வா!
என்றன்
அத்தாவுன் பொற்பாதம் அடையப்
பெற்றுல்
அல்லகண்டங் கொண்டடியேன்
என்செய்கேனே!"
(திருநாவுக்கரசரின் திருவானைக்கா
திருத்தாண்டகம்)

# ஒழுக்கங்கள் பதினெட்டு

எந்தப் பல்கலைக்கழகமும் கற்றுக் கொடுக்காத பதினெட்டு ஒழுக்கங்களை எந்த மனிதன் கடைப்பிடிக்கிறானோ அவன் யாருடைய தூண்டுதலும் இல்லாமல் ஞானியாகிறான்.

அந்தப் பதினெட்டு ஒழுக்கங்கள்:

| | |
|---|---|
| சாந்தம் | நேர்மை |
| காலந்தவறாமை | எளிமை |
| தற்பெருமையின்மை | வாய்மை |
| நிலை பிறழாமை | பற்றின்மை |
| சினம் அறுத்தல் | நெகிழ்வு |
| அடக்கம் | விடாப்பற்று |
| நாணயம் | பெருநிலை |
| ஈகை | பெருந்தன்மை |
| தூய்மை | பரந்த மனப்பான்மை. |

—சுவாமி சிவானந்த ஸரஸ்வதி.

தொகுத்தவர்: கமலா மாரியப்பன்-கோவை.

திருவானைக்காப் பெருமானின் திருவடியை அடையப் பெற்ற மகிழ்ச்சியால் 'இனி வேறோர் உறவும் வேண்டுவது இல்லை. துன்பத்திற்கு துளியும் அஞ்சேன், தாய் முதலியவரை நல்லவராகவும் மாட்டினைச் சும்மாடாகவும் கருதிக் கிடந்தால் யான் துன்பக் கடலுள் அழுந்தியொழிவேன்' என்று நாவுக்கரசர் பாடியருளினார்கள்.

அல்ல கண்டம் என்பது இங்குத் துன்பத்தைக் குறிக்கும். துன்பமாவது பிறப்பிணையும் அதன்கண் வரும் வினைப் பயன்களையும் உணர்த்தும். இங்கே, திருவானைக்காப் பெருமானைச் சித்தாய வேடத்தாய் என்ற சீரிய சொற்கொண்டு அர்ச்சிக்கின்றார்கள். சித்து-அறிவு. அது சத்தியைக் குறிக்கிறது. இறைவனது வேடங்களெல்லாம் சத்தி வடிவமன்றோ!

ஆகவே, அவனே யாவர்க்கும் உறவினனும் உண்மையான செல்வமும் ஆவான். 'உற்றவன் காண் உறவெல்லாம் ஆவான்காண்' என்றனர் அப்பர் பெருமானார். உலக இன்பங்கள் எல்லாவற்றையும் அவனே தருகிறான். நமக்கு ஆவன பலவும் அவனே அறிந்து செய்கிறான். அவனை மறந்துவிட்டு நம் சுற்றத்தார்களையே உற்ற துணையாகவும் உறுதிப் பொருளாகவும் நம்பி விடுகிறோம். இந்தச் சொந்தங்களால் நமக்குச் சுகமா அன்றி பிணியா என்பதை நாம் கொஞ்சமும் சிந்திப்பதில்லை.

'நாடும் பிணியாகும் நம்சனம் சூழ்ந்தக்கால்' என்று ஓதியருளினர் திருமூல தேவர். நம்முடைய இன சனங்களுடன் கூடியிருந்தால் பிறவிப் பிணியே மேலோங்கி நிற்கும். கட்டறுத்தல் என்பது கடினமாகிவிடும் என்று தெற்றென உணர்த்தினர்.

திருவருள் வழிநில்லாத உடம்பு தீயினைச் சாராத மட்கலம் போன்றது. விண்ணின்று மழைநீர் விழுந்தால் தீயினைச் சாராத மட்கலம் அழிந்து மீண்டும் மண்ணாகும். இப்படியே எண்ணற்ற மாந்தர் இறந்தொழிகின்றனர்.

இவ்வுடல் மூப்புப் பிணியுற்றுச் சாக்காட்டினை எய்தும். அப்போது இவ்வுடலாலும், உடல் உழைப்பால் பெற்ற உடைமையாலும், ஐம்புல நுகர்வுகளை ஆரத்துய்த்து இன்புற்ற பெண்டிரும் மக்களும் தத்தம் உடம்பினை நீக்கி அவ்வுயிருடன் பின் செல்லார். ஆயினும், செந்நெறியாகிய நன்னெறிக்கண் நின்று, மேற்கொண்ட திருவருளால் எய்தும் சீலமும் திருவடியுணர்வுமே உடன் துணையாய் ஒத்து வழி நடக்கும்.

ஆர்த்தெழு சுற்றமும் பெண்டிரும் மக்களும் ஊர்த்துறை வரைதான் உடன் வருவார்கள். பின்பு நீர்த்தலை மூழ்கி நினைப்பொழிவார்கள்.

யாக்கை, செல்வம், இளமை, உயிர் ஆகிய நிலையாமைகளை நாம் தேர்ந்தறிவதும் இல்லை; நிலை பெற்றான் திருவடிகளை தெளிந்தறிதலும் இல்லை. வைத்த நிதி, பெண்டிர், மக்கள், குலம், கல்வி எனும் பித்தவுலகினில் பிறந்து உழல்கின்றோம். சித்த விகாரக் கலக்கம் தெளிவிக்கும் அத்தன் திருவருளை நாம் அறிந்து கொள்வதில்லை.

நரியெனக்கென்னும் நாய் எனக்கென்னும் இந்நாறுடலை பிரியமுடன் வளர்க்கின்றோம்; இதனால் என்ன பேறென்று ஒரு பொழுதும் நினைப்பதில்லை. இந்த உடலும் அதுகொள்ளும் உறவும் எத்துணைப் பொய்யானவை என்பதை நாம் புரிந்து கொள்வதில்லை.

" அன்னை யெத்தனை யெத்தனை
அன்னையோ
அப்ப னெத்தனை யெத்தனை
அப்பனோ
பின்னை யெத்தனை யெத்தனை
பெண்டிரோ
பிள்ளை யெத்தனை யெத்தனை
பிள்ளையோ"

என்றனர் முற்றத் துறந்த பட்டினத்தடிகள்.

முன்னம் எத்தனையோ ஜென்மங்கள் முடிந்துவிட்டன. பின்னும் எத்தனையோ ஜென்மங்கள் பிறக்க இருக்கின்றன. நாம் ஒரு ஜென்மத்தில் அடைந்திருக்கும் தாய்-தந்தையரையும், பெண்டிர்-பிள்ளைகளையும் மறு ஜென்மத்திலும் சென்றடைவதில்லை.

அதனால் ஜென்மங்கள் தோறும் நம் சொந்தங்கள் மாறுகின்றன. மாறி வரும் உறவுகளில் மனம் வைத்து மாறாத பரம்பொருளை மறந்துவிடு கிறோம். ஓ, இந்த உறவுகள் தாம் எத்துணைப் பொய்யானவை!

தன்னுடைய சுகத்திற்காகவே காத லன் காதலியை நேசிக்கிறான்; மனைவி கணவனைக் காதலிக்கிறாள்; பெற்றோர் பிள்ளைகளிடம் அன்பு செலுத்து கிறார்கள். தனது இன்பத்திற்கோ முன் னேற்றத்திற்கோ கேடு செய்பவர் எத்தனைதான் உற்றாராய் இருந்தா லும் அவர்கள் புறக்கணிக்கப்படுகின் றனர். புலியும் தமக்கு அனுகூல மெனில் பிரியம் கொள்வர்; புத்திர னும் பகை செய்தால் வெறுப்படை வர்.

இதனைத் தெற்றென உணர்ந்த மாணிக்கவாசக சுவாமிகள், 'உற் றாரை யான் வேண்டேன்; ஊர் வேண் டேன், பேர் வேண்டேன்,' என்றனர்.

பல்லவ மன்னன் ஐயடிகள் காடவர் கோன் நாயனாரால் பாடப் பெற்ற 'க்ஷேத்திரத் திருவெண்பா' நிலை யாமைத் தத்துவத்தை எழில்படக் கூறுகின்றது.

"ஓடுகின்ற நீர்மை ஒழிதலுமே உற்றாரும்
கோடுகின்றார் மூப்பும் குறுகிற்று—
நாடுகின்ற
நல்லச் சிற்றம்பலமே நண்ணாமுன்
நன்னெஞ்சே
தில்லைச் சிற்றம்பலமே சேர்."

எங்கும் ஓடித் திரிந்து தொழில் புரியும் ஆற்றல் ஒடுகின்ற நீர்மை எனப்படும். அஃது உடம்பில் குறைந்தபோது உற்றாரும் கோடுகின் றார். முன்பு சொல்வழி நடந்த சுற்றத்தார்கள் மனம் மாறுபடுகின் றனர். முதுமையும் விரைந்து பற்று கின்றது. ஆகவே, இவ்வுடம்பு சிதைந்து நல்லச் சிற்றம்பலமாகிய சுடுகாட்டில் சுடப்பட்டு அழிதற்கு முன் இறைவன் திருக்கூத்தியற்றும் தில்லைச் சிற்றம்பலத்தை நெஞ்சமே நினைந்து போற்றுவாயாக என்றனர்.

# "அலைகின்ற மனமே....!"

புலவர்: பா. தங்கவேலு — வேலூர்

### பல்லவி

அலைகடல் துரும்பாக அலைகின்ற மனமே!—ஏழு
மலையானின் திருவடி தொழுவாய் தினமே! (அலைகடல்)

### அநுபல்லவி

திருவேங் கடவன்மேனி கண்டால் மனமே—வந்த
துன்பங்கள் பனிபோல ஓடுமிக் கணமே!
ஒருமுறை நின்றகோலம் கண்டால் மனமே—உயர்ந்த
இமயம்போல் வந்தடையும் வாழ்வில் சீலமே! (அலைகடல்)

அடைக்கலக் கைஅன்புடன் கண்டால்மனமே—கோடி
அளவாக வந்தாலும் அழியுமவர் சினமே!
படைக்கலச் சக்கரம் பார்த்தாலே மனமே—காற்றில்
பறக்கும் பஞ்சாகும் பகைவர் இனமே! (அலைகடல்)

திருத்தோளை எண்ணித் தரிசித்தால் மனமே — நாளும்
தீயிடைப் புழுவாகும் பகைவர்தீக் குணமே!
திருச்சங்கைக் கூப்பித் தொழுதால் மனமே — கண்ட
தீமைகள் பறந்தோட வரும்தொண்டு மனமே! (அலைகடல்)

தாமரைக் கண்ணொளி கலந்தால் மனமே — இந்தப்
பூமியில் திண்ணமாய் மண்டும் தனமே!
தாம்புல வாயினைப் பார்த்தால் மனமே — தூய
பொற்காதில் வந்தடையும் கேள்வித் தனமே! (அலைகடல்)

அருள்சேர் திருமுகம் கண்டால் மனமே — வீசும்
அகமெனும் மலரில் அன்பெனும் மணமே!
"திருமலை" ஒருமுறை நினைத்தால் மனமே — பொல்லாத்
துயரம் ஒளிமுன் இருளாகுமித் தினமே! (அலைகடல்)

சீனிவாசன் மணிமுடி பணிந்தால் மனமே — என்றும்
சீராக வாழ்ந்திடச் சேர்ந்திடும் பணமே!
"சீனிவாசா" என்றுநா சொன்னால் மனமே — இன்பம்
சேர்ந்திட்ட வைகுந்தம் செல்வோமித் தினமே! (அலைகடல்)

இன்னொரு வெண்பா ஐயடிகள் பெற்ற உலக அனுபவத்தினை நன்கு விளக்குகின்றது.

"குத்திநடந்து குனிந்தொருகை
கோலூன்றி
நொந்திருமி யேங்கி நுரைத்தேறி—
வந்துநதி
ஐயாறு வாயாறு பாயாமுன் நெஞ்சமே
ஐயாறு வாயால் அழை."

இருந்த இடத்தைவிட்டு எழு வதற்கு வலியின்றி உடல் கூனி வளைய, ஒரு கையில் கோலூன்றி, இருமல் நோயால் பெரிதும் வருந்தி, நுரைத்து, ஐ எனப்படும் கோழை ஆறுபோல வாய்வழியே பாய்ந்து இறப்பினை எய்துமுன் ஐயாறு எனும் திருத்தலத்தினில் உறையும் பெரு மானை வாயால் சொல்லி வழிபட்டு உய்வாயாக என அறிவுறுத்துகிறார் ஐயடிகள்.

இல்லும் பொருளும் இருந்த மனை யளவே உயிர் செல்லும் போதெது வும் சேர்ந்து வருவதில்லை என்பதை ஆன்றோர் பலரும் அறிவுறுத்திய போதிலும் ஒவ்வொருவரும் தம் சொந்த வாழ்க்கையில் தமக்கு ஏற்

படும் அனுபவங்களைக் கொண்டே அறிவு விளக்கம் பெறுகின்றனர்.

நம்முடைய நிழலென்று நாம் மிகுதியாகப் பேசுகின்றோம். அது நமக்கு எந்தக் காலத்தும் எவ்வகை உதவியும் தந்தது இல்லை.

அதுபோல் செல்வமும் நம்முடைய கையில் இருப்பதால் என்னது மாடென்று இருமாந்திருக்கின்றோம். மாறுகின்ற செல்வத்தை மறைகின்ற தேகம் தன்னுடையதாகக் கருதுகிறது. எதையும் தன்னுடையதாக எண்ணும்போதுதான் துன்பங்கள் பற்றுகின்றன. செல்வத்தைச் சிவனுடையதாகக் கொள்ளும் பக்குவம் வாய்க்கப் பெறும்போது அச்செல்வங்களால் வரும் துன்பங்களும் அவர்களைப் பற்றுவதில்லை.

வாழ்க்கைச் சந்தையிலே வருகின்ற பொருளை யெல்லாம் சொந்தமெனக் கொண்டு துன்பம் அடைகின்றோம். உலகப் பொருட்களெல்லாம் தம் உடைமையெனக் கொள்ளுவதும், அவை வரும்போது மகிழ்ந்தாடுவதும், போகும்போது புலம்பித் திரிவதும் எத்துணைப் பேதமை!

தேகத்தைத் தான் என்றும் செல்வத்தைத் தனதென்றும் மோகத்தைக் கொண்டு முடிகின்றோம் துயரத்தில். இல்லாதப் பொருளுக்கு ஏங்கி அழுகின்றோம். நில்லாத இன்பத்தை நிலையானதென்கின்றோம். இவை மனமெனும் மாயை மயக்கிடும் கோலங்கள். தேகங்கள் விழும்போது கொண்ட கோலங்கள் மறைகின்றன. இதனைக் 'கூடம் கிடந்தது; கோலங்கள் இங்கில்லை' என்ற அழகிய வரிகளில் கூறினர் திருமூல தேவர்.

ஆவி பிரிந்தது; ஆக்கை (உடல்) கிடந்தது. ஆயினும் அதன் கண் முன்பு விளங்கிய இயற்கைப் பொலிவில்லை; காட்சிக்குரிய ஒப்பனைகள் இல்லை.

பந்தல் பிரிந்தது; பண்டாரம் கட்டற்றது. உண்டல், உழைத்தல், ஓடல், ஆடல் முதலிய இயக்கங்கள் அற்றொழிந்தன. இதனை—

''பண்டம் பெய்கூரை பழகி விழுந்தக் கால்
உண்ட அப்பெண்டிரும் மக்களும் பின்செலார்
கொண்ட விரதமும் ஞானமும் அல்லது
மண்டி அவருடன் வழிநட வாதே.''

என்றது தமிழ் மந்திரம்.

இளமை, யாக்கை, செல்வம், உயிர் ஆகியயாவும், எல்லாப் பொருள்களும் நிலையில்லாதன; சிவபிரான் ஒருவனே என்றும் நிலையுடையவன் என்பதனை உலகிற்கு அறைகூவி அருளிச் செய்தவர் ஆளுடைய அரசர். 'சிவபிரானையன்றிப் பிறிதொரு பொருளும் நிலையுடையன அல்ல' என்னும் தெளிவான உணர்வே சிவ ஞானம் எனப்படும்.

அத்தகைய சிவஞானம் வாய்க்கப் பெற்ற திருநாவுக்கரசர் 'எம்மாடு சும்மாடு; ஏவர் நல்லார்?' என்ற தம் தத்துவக் கேள்விக்குத் தக்கதோர் பதிலினை வேறோர் தாண்டகத்தில் விளம்பியருள்கின்றனர்.

''திருவேயென் செல்வமே தேனே வானோர்
செழுஞ்சுடரே செழுஞ்சுடர் நற் சோதி மிக்க
உருவேயென் னுறவே என்ஊனே ஊனின்
உள்ளமே உள்ளத்தி னுள்ளே நின்ற
கருவேயென் கற்பகமே கண்ணே கண்ணிற்
கருமணியே மணியாடு பாவாய் காவாய்
அருவாய வல்வினைநோய் அடையா வண்ணம்
ஆவடுதண்டுறை யுறையும் அமர ரேறே.''

வானோருக்கும் ஏனோருக்கும் செல்வத்துட் செல்வமாய் விளங்குபவன் சிவபெருமான். அவனைச் ''ஸர்வைஸ்வர்ய சம்பன்னன்'' என்கிறது அதர்வசிகை உபநிடதம். செல்வமெல்லாம் சிவனுடையது. அவனுக்கு இல்லாத பொன்னும் பொருளும் இப் பூமியில் உண்டோ? அவன் செம்பொன்னால் அணிசெய்து அங்கமெல்லாம் அலங்கரித்துக் கொள்ளவில்லை. யாவரும் அஞ்சி வெறுக்கும் நச்சுப் பாம்பையும் என்பு மாலையினையும் தமது பூணாரங்களாகக் கொண்டனன்.

பொன்னையும் பொருளையும் உயிர்கள் போகம் நுகர்தற்கு வேண்டி ஆக்கியளித்துவிட்டு யாவரும் ஒதுக்கிய பொருட்களை உகந்தணிந்தனன். உலகப் பொருட்கள் யாவும் இறைவனது உடைமைகளாகும். ஆயினும அவன் 'தனது' என்று உரிமைப் பாராட்டாது ஊராரிடும் பிச்சை கொண்டு உழன்று திரிவது அவனது தியாகத்தைக் குறிக்கிறது. ஆகவே அவன் தியாகராஜன் எனப்படுகிறான்.

தாம் நினைத்த மாத்திரத்தில் அண்ட சராசரங்களையும் படைத்துக் காத்துத் துடைக்கவல்ல எம்பெருமான் தமது இடையில் ஓர் அரை ஞாணைக்கூட சொந்தமாகக் கொண்டிருக்கவில்லை! நிலையற்ற இவ்வுலகத்தில் எதையும் சொந்தம் பாராட்டாதே என்னும் தத்துவத்தைத் தன் வடிவத்தில் கொண்டிருப்பவன் சிவன்.

உலகம் யாவும் இறுதி எய்தும் காலத்து அவ்விறுதியால் தான் தாக்குண்ணாது எஞ்சி நிற்பவன் சிவபிரான் ஒருவனே. அதனால் தான் திருநாவுக்கரசர் செல்வங்களையும் சுற்றத்தார்களையும் தூவென்றுதறிவிட்டு சிவபெருமானின் பொற்பாதங்களைப் பற்றிப் பிடித்தனர். அவனே அனைத்துயிர்களையும் தாங்கிப் பிடிக்கும் அழியாத செல்வம்; அவனே ஆருயிர்க்கெல்லாம் பேருறவானவன் என்று நமக்குச் சுட்டிக் காட்டியருளினர். அவனைக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி ஓதியுணர்ந்தால் வினைத் தொடக்கு அகன்று விழுமியப் பேறெய்தலாம்!

# எம்பெருமானர் தரிசனம்

முன்னுரை :

உலகில் மனிதன் தோன்றுவதற்கு முன்பே பஞ்ச பூதங்கள் தோன்றின. 'ஆகாசாத் வாயு: வாயோர் அக்நி: அக்நிர் ஆப; அப்ய ப்ருத்வீ: ப்ரதிவ்யா ஒஷதய: ஒஷதிப்யோன்னம் அன்னுத் புருஷ': என்று வேதம் இதைப் பகர்கிறது. பஞ்ச பூதங்கள் சேர்ந்த ஒரு கூட்டே மனித உடல். அசேதனமான உடலில் அணுவான ஆத்மா ப்ரவேசித்து அதை இயக்குவிக்கிறது. ஆக சைதன்யம் வந்தவாறே மனிதன் இயங்கினன். அவ்வாறே சகல ப்ராணிகளும் இயங்கத் தொடங்கின. தாவரங்களும் இயங்கின. அணுவான ஆத்மாவுக்கே பெரிதான யானை போன்ற உடலை இயக்கும் சக்தி உள்ளதென்ருல், எல்லாவற்றுக்கும் ஈசனுன எம்பெருமானுக்கு எவ்வளவு சக்தி என்று கூறவும் முடியுமோ?

ஈச்வரனே ஜகத் காரணம்:

'ஸஹஸ்ர ஶீர்ஷம் தேவம் விஸ்வாக்ஷம் விஸ்வ ஸம்பவம்! விஸ்வம் நாராயணம் தேவம் அக்ஷரம் பரமம் ப்ரபும்!விஸ்வத பரமாந் நித்யம் விஸ்வம் நாராயண ஹும் ஹரிம்!' என்ற சுருதி வாக்யங்களின்படி இந்த ஜகத் தானது பரமனிடமே உற்பத்தியாகி லயமடைகிறது. வேத வ்யாஸ பகவான் ப்ரஹ்ம ஸூத்ரத்தில் "லோகவத் லீலா கைவல்யம்" என்று உலக ச்ருஷ்டி பகவானுடைய லீலை என்று அருளிச் செய்கிருர். லீலை என்ருல் ஸங்கல்பம் என்றும் அர்த்தம். அதாவது ஸங்கல்ப மாத்திரத்தில் ஸர்வேச்வரன் உலகையெல்லாம் படைக்கிருன்.

இதையே ஆழ்வார், 'தானே உலகெல்லாம் தானே படைத்திடந்து தானே உண்டுமிழ்ந்து தானே ஆள்வானே" என்று அருளிச் செய்கிருர். ப்ரளய காலத்தில் தன்னுள் ஒடுங்கின தேதன, அசேதன வஸ்துக்கள் எல்லாவற்றையும் சிருஷ்டிக்கும் போது ஸங்கல்ப மாத்ரத்தில் வெளிக்கொண்டு வரும் அகடித கடனு ஸாமர்த்யத்தை என்னவென்பது?

ஈச்வரன் ஸர்வ அந்தர்யாமி

எம்பெருமான் "தன்னுள் கலவாதது எப்பொருளும் தானிலையே" என்றவாறு சேதந (உயிருள்ள) அசேதந (உயிரற்ற) பொருள்கள் எல்லாவற்றுள்ளும் உறைந்திருக்கிருன். "அந்தர்பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண ஸ்தித;" என்று தைத்திரீய உபநிஷத்தும் ஓதிற்று. அணுவுக்கும் அணுவாகவும் பெரியனுக்கும் மிகப் பெரியதாகவும் எம்பெருமாள் உள்ளான் என்பதை வேதம் "அணோரணீயாந் மஹதோ மஹீயாந்" என்று கூறுகிறது. அணுவான ஆத்மா கண்ணுக்குப் புலப்படாமல் மனித, மிருக, தாவர உடல்களைத் தாங்குவதுபோல் ஸர்வந்தர்யாமியான ஈசன் ஆத்மாவையும் தாங்குகிருன்.

ஆழ்வார் இந்த உண்மையை 'கரந்த பாலுள் நெய்யேபோல் இவற்றுள் எங்கும் கண்டுகோள்" என்ற ஸ்ரீ ஸூக்தியால் நிலைநாட்டினர். பாலில் நெய் இருப்பது யாரால் அறிய முடியும்? பாலை நன்ருகக் கடைந்து வெண்ணெயைத் திரட்டி அதனை நன்ருகக் காய்ச்சினுல் நெய் கிடைக்குமாப் போலே, உள்ளத்தை இருத்தி ஐம்புலன்களை அடக்கி மனக் கண்ணுல் காண முற்பட்டால் அணுவான ஆத்மவஸ்து ஞானக் கண்ணுக்குப் புலப்படும்.

ஆத்மா ஈசனின் சரீரம்

ஆத்மா என்பது சகல சேதந, அசேதந பதார்த்தங்களுள் உறையும் ஜீவாத்மா. இந்த ஜீவாத்மாவுக்கும் அந்தர்யாமி பரமாத்மா (Cosmic Soul). இந்தப் பேருண்மையை வேத ப்ரமாணங் கொண்டு விளக்குவோம்.

வேதம் "யஸ்யாத்மா ஸரீரம்! யஸ்ய ப்ருத்வீ ஸரீரம்! யஸ்ய தேஜஸ் ஸரீரம்!" என்று பரமாத்மாவுக்கு எல்லாம் ஸரீரம் என்று ஓதுகிறது. "யஸ்ய ஆத்மா ஸரீரம்" என்பதால் ஆத்மாவுக்கும் அந்தராத்மா பர ப்ரஹ்மம் என்பது வெளிப்படை.

"க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர:" என்பதும் ஸ்ருதி வாக்யம். "த்வௌ ஸுபர்ணௌ ஸயுஜௌ ஸஹாயௌ" என்று வேதம் பரமாத்மாவும், ஜீவாத்மாவும் வேறு என்று ஸ்பஷ்டமாக ஓதிற்று. இதையே ஆழ்வார் "அடியேனுள்ளான் உடலுள்ளான்" என்ற திவ்ய ஸூக்தியால் அருளிச் செய்தார். அடியேனுள்ளான் என்பதால் ஜீவாத்மாவுக்கும் அந்தர்யாமியாய் எம்பெருமான் உறைகிருன் என்று பொருள்படும். உடலுள்ளான் என்பதால் ஸ்தூலமான பூத உடலுக்குள்ளும் ஈச்வரன் மறைந்து உறைகிருன். பருச உபநிஷத் மயமான, அப்ராக்ருத தேஜஸ் பொருந்திய எம்பெருமான் ஆத்மாவாய் ஜீவாத்மாக்களையும், பஞ்ச பூத ஸரீரங்களையும் தாங்கி நிற்கிருன் என்பது நிஸ்ஸந்தேஹமாக நிரூபிக்கப் பட்டது.

திரு. K. A. தேவராஜன்
சென்னை-1.

# துயர் துடைத்த திருமஞ்சனம்

உறையூரை ஆண்ட சோழ மன்னன் ஒரு சமயம் திருவானைக் காவல் உறையும் ஜம்புகேசுவரருக்குத் தன் மனைவி அணிந்திருந்த முத்தாரத்தைச் சூட்டி அலங்கரிக்க ஆசைகொண்டு மனைவியுடன் கோயிலுக்குப் புறப்பட்டான். கோயில் அருகில் காவேரியில் அவ்விருவரும் நீராடப் புகுந்தார்கள். அரசியார் நீராடும்போது அவர் கழுத்தில் அணிந்திருந்த முத்தாரம் நதியில் நழுவி நீரில் மூழ்கியது. அரசன் மிகவும் வேதனை அடைந்தான். கோயிலுக்கு விரைந்து சென்று இறைவனை இறைஞ்சி நின்றான். நல்ல நேரம் அது. அப்புலிங்கத்துக்கு அபிஷேகம் நடந்து கொண்டிருந்தது. திருமஞ்சனத்துக்காக காவேரியிலிருந்து கொண்டுவந்த தீர்த்தம் அது. திருமஞ்சனக் குடத்திலிருந்து ஒரு முத்தாரம் இறைவன் திருமுடியில் இறங்கி இயல்பாக அலங்கரித்தது. அரசியார் காவேரியில் தவறிய முத்தாரமே அது. அரசனும் உடன் இருந்தவர்களும் (அக்காட்சியைக் கண்டு) வியந்து நின்றார்கள். இறைவனின் திருவிளையாடலை எண்ணி எண்ணி உள்ளம் பூரித்தார்கள். இந்நிகழ்ச்சியை சுந்தரமூர்த்திநாயனர் தாம் இயற்றிய தேவாரத்தில் பாடி மகிழ்கிறார்.

திருக்கோவலூர் — ஆர். சுப்பராவ்.

பேதமே ஸத்யம் :

"அஹம் ப்ரஹ்மாஸ்மி" என்ற ஸ்ருதியும் அஹம் ப்ரஹ்மம் அஸ்மி என்று ஜீவாத்ம பரமாத்ம பேதத்தையே ஸித்தப்படுத்துகிறது. ஸ்ரீமத் பகவத் கீதையில் பகவான் அர்ஜுனனை நோக்கி "பஹூநாம் ஜன்மானும் அந்தே ஞானவான் மாம் ப்ரபத்யதே | வாஸுதேவ ஸர்வம் இதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: ||" என்று அருளிச் செய்திருப்பதால் "எண்ணற்றப் பல பிறவிகள் கழிந்து கடைசியான பிறவியில் பூர்ண ஞானம் பெற்ற ஒரு மஹாத்மாவே என்னைச் சரணடைகிறான். ஜகத் ஸர்வம் வாஸுதேவம் என்று தாரக, போஷக, போக்ய வஸ்துக்களான என்னையே பற்றும் மஹாத்மா கிடைத்தற்கு அரியவன்" என்ற பகவத் வசனம் பரமாத்மாவும், ஜீவாத்மாவும் வெவ்வேறான வஸ்துக்கள் என்பதை உறுதிப்படுத்துகிறது.

"ஆப்ரஹ்ம புவநாந் லோகாந் புநராவ்ருத்தி நோர்ஜுந | மாமுபேத்யது கௌந்தேய துக்காலய மஸாஸ்நிந: |" என்று ஸாக்ஷாத் பரப்ரஹ்மமான ஸ்ரீக்ருஷ்ண பரமாத்மா தன்னை உபாசித்துத் தன்னிடம் சரணமடைந்தவர்கள் திரும்பி வருதல் இல்லாத லோகத்தை அடைகிறார்கள் என்று தன்னுடைய இருப்பிடமான பரமபதத்தைக் குறிப்பிட்டதிலிருந்து, ஈச்வரன் வேறு, சைதன்யமான ஆத்மா வேறு என்பது எளிதில் விளங்கக் கூடிய உண்மை.

அவதார உண்மை :

"ஜந்ம கர்மச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வத் த்யக்தா தேஹம்புனர் ஜன்மம் நைதி மேமேதி ஸோர்ஜுந ||" என்று பகவான் தன் சோதிவாய் திறந்து கீதையில் அருளிச் செய்வதால் அவனும் பிறக்கிறான், பல அத்புத சேஷ்டிதங்களைச் செய்கிறான் என்பது ஸத்யமாகிறது. ஆதிசங்கரரின் "பகவான் அவதரிப்பதில்லை" என்ற கூற்று பகவத் வசனத்தாலேயே மறுக்கப்பட்டதாயிற்று.

"ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" என்ற ஸ்ருதி வசனத்துக்கு ஆதிசங்கர பகவத் பாதர் "ப்ரஹ்மமே ஸத்யம் ஜகந் மித்யா" என்று பொருள் கூறினார். ஆனால் "மாயை" என்று ஆதிசங்கரர் எதை விவரித்தாரோ, அதை பகவான் கீதையில் "மம மாயா துரத்யயா" என்று எனது ஸங்கல்பத்தை அறிய முடியாது என்று தமது திருவுள்ளத்தையும், தன்னையும் தன்னைப் பற்றுகிறவர்களாலேயே அறிய முடியும் என்று அருளிச் செய்தான். மாயா என்பதற்கு அமர கோசம் வயுனம், ந்யூனம் என்று பொருள் காட்டுகிறது. புதிது புதிதாகத் தோன்றிக் கொண்டிருப்பது மாயை. இவ்வுலகில் நாம், ஒவ்வொரு நிமிடமும் புதிது புதிதாக வஸ்துக்கள் தோன்றுவதும், அவை மறைவதும், பின் தோன்றுவதும் காண்கிறோம். மருத்துவ சாஸ்திரப்படி நம் உடலில் ஒவ்வொரு நிமிடமும் உயிரணுக்கள் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. இந்த சக்திக்கு மாயா சக்தி என்று பெயர். இந்த மாயா சக்தி பரமாத்மாவுக்கே கட்டுப்பட்டது. அதனாலன்றோ "மாயன்" என்று எம்பெருமானுக்குத் திருநாமம்.

ஆக பரமாத்மாவான கண்ணன் ஜீவாத்மான அர்ஜுனனுக்கு யதார்த்த ஞானத்தை கீதை மூலம் உபதேசித்தான். இறுதியில் "ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாம் ஏகம் சரணம் வ்ரஜ | அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச ||" என்று சரம ச்லோகத்தில் "எல்லா தர்மங்களையும் விட்டு என்னையே பற்று; சரணம் அடைவாய், நான் ஸகல பாபங்களிலிருந்தும் உன்னை விடுவித்து மோக்ஷமளிப்பேன்; கவலை வேண்டாம்" எனத் தெளிவாக உபதேசித்திருப்பதால் ஸகல சேதன கோடிகளுக்கும் ஈசனும், அந்தர்யாமியாயும் உள்ள பரப்ரஹ்மம் வேறு என்பது உண்மை ஆகிறது. "என் அவதாரங்களை

உள்ளபடி எவன் அறிகிருனே, அவ னுக்கு மறுபிறவி கிடையாது" என் றும் பகவான் அர்ஜுனனைப் பார்த்து அருளிச் செய்திருப்பதால், அப்ரதிம ப்ரபாவத்தை உடைய ஸர்வேச் வரன் நம்மைப் போல் பிறக்கிருன்; அவன் பிறப்பு அவனுடைய திவ்ய ஸங்கல்பத்தினுல் ஏற்படுகிறது, கர்ம வச்யமாக இல்லை என்று நன்கு விளங்குகிறது.

எம்பெருமானுர் நிர்வாஹம் :

ஸ்ருதி வாக்யங்களையும், ப்ரஹ்ம ஸூத்ரத்தையும், ஸ்ரீமத் பகவத் கீதையையும் ஆராய்ந்த நம் இராமா நுஜமாமுனி இவையெல்லாம் "ஸர் வேச்வரன் ஒருவனே, அவன் எல்லா வற்றுக்கும் காரணம், அவன் எல்லா வற்றுள்ளும் அந்தர்யாமியாய் உறைந்து உள்ளதால், சகல சேதநா சேதந வஸ்துக்களும் ஸத்யமே" என்று "ஸ்ரீபாஷ்யத்தில்" தமது பரம ப்ராமாணிகமான, ஸர்வ வேத ஸம்மதமான "விசிஷ்ட அத்வைத" கொள்கையை ஸ்தாபித்தருளினர்.

நாரங்களான ஸகல சேதநாசேதந பொருள்களுக்கெல்லாம் அயநமான (இருப்பிடமான) ஈச்வரன் ஒரு வனே. அவனே "நாராயணன்" என்பது எம்பெருமானுர் தரிசனம். ப்ரஹ்மா, சிவன், இந்திரன் முதல் உலகில் காணும் புல், பூண்டெல் லாம் பரப்ரஹ்மமான நாராயண னுலே ஸ்ருஷ்டிக்கப் பெற்று, நாரா யணனுலே தாங்கப் பெற்று, நாரா யணனிடமே லயிக்கின்றன என்ற பரம ஸத்யத்தை ஸ்ருதி, ஸ்மிருதி, இதிஹாஸ, புராண வசனங்களைக் கொண்டும், ப்ரஹ்ம ஸூத்ர, ஸ்ரீபக வத் கீதா வாக்யங்களைக் கொண்டும், ஆழ்வார்களின் ஸ்ரீஸூக்திகளைக் கொண்டும் எம்பெருமானுர் நிலை நாட்டினர்.

வேதத்தில் வேத, அபேத, கடக ஸ்ருதிகள் உள்ளதால் இவை மூன் றையும் ஒருங்க விட்டவர் ஸ்வாமி பகவத் இராமாநுசரே ஆவார். அத் வைதம் அபேத ஸ்ருதியை மட்டும் தழுவியது. த்வைதமோ பேத ஸ்ருதிகளையே ஒப்புக்கொண்டது. ஆனுல் "விசிஷ்ட அத்வைதமோ" பேத, அபேத, கடக ஸ்ருதிகளான வற்றையெல்லாம் ஸமன்வயப்படுத் தும் ஸர்வ வேத ஸம்மதமான தத்து வம். இதனுலன்ரே "ஸ்ரீ பாஷ்ய காரர்" என்று பகவத் இராமாநுசர் கொண்டாடப்பட்டார். ஸ்வாமி தேசிகன் தாம் அருளிச் செய்த "யதி ராஜ ஸப்ததியில்" எம்பெருமானு ருக்கு ஒரு விசேஷணம் இடுகிருர். அதாவது "பத்ரவேதீம் த்ரிவேதீம்" என்பது. எம்பெருமானுர் ஒருவரே ஜகதாசார்யர் என்பதைக் கூருமல் கூறினர் நிகமாந்த மஹாதேசிகன். "பத்ரவேதீம் த்ரிவேதீம்" என்று ஸ்வாமி தேசிகன் எம்பெருமானுர் வேதத்தின் மூன்று விதமான ஸ்ருதிக ளான (வேத, அபேத, கடக) ஸிம்ஹா ஸனத்தில் வீற்றிருப்பதைக் கண்ட மாத்திரத்திலேயே இதர மதங்கள் எல்லாம் தாமே நசித்துப் போயின வென்றும், பௌத்தர்களுடைய பாட் டுக்கள் அடங்கின, கபில மதம் எங்கோ மறைந்தது, கணுதனுடைய குரல் ஓய்ந்தது, சிவ ப்ரஹ்மாதிகளின் ஸப்தமே இல்லை, குமாரில பட்டரு டைய வாதம் ஒழிந்தது, ப்ரபாகர மதம் காணுமல் சென்றது, சங்கர மதம் பஸ்மமானதென்று ஆச்சர்ய மாக அருளிச் செய்கிருர்.

ஸ்வாமி தேசிகனின் ஸ்ரீஸூக்தியை சற்றே நோக்குவாம்;

"கரதா தாதாகதாநாம் களதி
கமநிகா காபிலீ க்வாபி லீநா|
ஹீநா காணுத வாணீ த்ருஹிண
ஹர கிர: ஸௌரபம் நாரபந்தே||
க்ஷாமா கௌமாரிலோக்திர் ஜகதி
குருமதம் கௌரவாத் தூரவந்தம்|
கா ஸங்கா ஸங்கராதேர் பஜதி
யதிபதௌ பத்ரவேதீம் த்ரிவேதீம்||

எம்பெருமானுர் தரிசனம்:

மணவாள மாமுனிகளின் திருவாக் கை இப்போது நோக்குவோம். உப தேச ரத்தின மாலையில் மாமுனிகள்,

"எம்பெருமானுர் தரிசனமென்றே
இதற்கு நம்பெருமாள்
பேரிட்டு நாட்டி வைத்தார்
அம்புவியோர் இந்த தரிசனத்தை
எம்பெருமானுர்
வளர்த்த அந்தச்செயல் அறிகைக்காக"

என்று அருளிச் செய்கிருர். இதன் கருத்தாவது; வேத, ப்ரஹ்ம ஸூத்ர பகவத் கீதா சாஸ்திரங்களில் ஸ்தா பிக்கப்பெற்ற விசிஷ்டாத்வைத தத் துவத்தை எம்பெருமானுர் உலகமளா விய புகழால், அப்ராக்ருத தேஜஸ் ஸால், மயர்வற மதிநலத்தால் வளர்த்த அம் மாபெரும் செயலை உவந்த பரப்ரஹ்மமான நம்பெரு மாள் (ஸ்ரீரங்கநாதன்) "எம்பெரு மானுர் தரிசனம்" என்றே திருநாமம் சூட்டினர்.

எம்பெருமானுரின் தரிசனமான "விசிஷ்டாத்வைதம்" வேதமே காட் டிய தரிசனம் என்பதை அவர் தாமே ஸ்ரீபாஷ்யம் தொடங்கும்போது ஓர் அழகான பூர்வ பீடிகை இட்டு அரு ளிச் செய்கிருர்.

"பகவத் போதாயந க்ருதாம் விஸ் தீர்ணும் ப்ரஹ்ம ஸூத்ராம் ஸூக்ஷ்ம வ்ருத்திம் தந் மதாநுஸாரேண ஸூத் ராக்ஷராணி வ்யாக்யாஸ் ஸந்தே அதாதோ ப்ரஹ்ம ஜிஜ்ஞாஸ:"

ஆதிசங்கரரோ, ஆனந்த தீர்த் தரோ, மற்ற எந்த பூர்வ ஆசார்யர் களோ இம்மாதிரியான ஸ்ரீஸூக்தியை அருளிச் செய்யாதது எம்பெருமானு ரின் அஸாதாரணமான பெருமையை உலகுக்கு உணர்த்துகிறது.

முடிவுரை

எம்பெருமானுரே உலகு உய்ய அவ தரித்த மஹா புருஷர் ஆவார். அவர் காட்டிய நெறியே காலச் சிறந்த தரி சனம் ஆகும். அவர் நாட்டிய சமயம் ஸ்ரீமந்நாராயணனே பர தெய்வம் என்பது. அவருடைய திருவடிகளே நமக்குத் தஞ்சம்.

" வாழி எதிராசன் வாழி எதிராசன்
வாழி எதிராசன் என வாழ்த்துவார்
—வாழியென
வாழ்த்துவார் வாழியென
வாழ்த்துவார்
தாளிணையில் தாழ்த்துவார்
விண்ணேர் தலை"
(ஆர்த்தி ப்ரபந்தம்)



# திருமலையில் தங்கு வசதிகள்

திருமலையில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் தங்கு வசதிகளின் வாடகைக் கட்டண விவரங்கள்.

| குடில்கள் வகை | வாடகை விவரங்கள் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| சிறப்பு வகை குடில்கள் | ரூ. 100/- |
| டி. பி. உட்குடில்கள் | 70/- |
| டி. பி. வெளிக்குடில்கள், III-வது வரிசையும் சேர்த்து | |
| 'ஏ' பகுதி (வெந்நீர் வசதி உள்ளது) | 20/- |
| 'பி' பகுதி (வெந்நீர் வசதி இல்லாதது) | 12/- |
| வி. வி. சி. மற்றும் எம். பி. சி. 31 மற்றும் 26 | 70/- |
| எம். பி. சி. 'ஏ' பகுதி (வெந்நீர் வசதியுடன்) | 20/- |
| எம். பி. சி. 'பி' பகுதி (வெந்நீர் வசதி இல்லாதது) | 12/- |
| டி. பி. அறைத்தொகுதிகள் மற்றும் ஏ. டி. சி. அறைத் தொகுதிகள் | |
| வெந்நீர் வசதியுடன் | 15/- |
| வெந்நீர் வசதி இல்லாதது | 10/- |
| ஏ. டி. சி. கீழ்த்தளம் | |
| 'ஏ' பகுதி | 30/- |
| 'பி' பகுதி | 30/- |
| எஸ். எம், சி.; எஸ். என். சி.; ஏ. என். சி.; ஜி. என். சி.; எச். வி. சி. | |
| 'ஏ' பகுதி வெந்நீர் வசதி இல்லாதது | 12/- |
| 'பி' பகுதி வெந்நீர் வசதி இல்லாதது | 12/- |
| எச். வி. டி, சி. அறைத்தொகுதிகள் (ஒவ்வொன்றும்) வெந்நீர் வசதியுடன் | 25/- |
| எச். வி. டி. சி. அறைத்தொகுதிகள் (ஒவ்வொன்றும்) வெந்நீர் வசதி இல்லாதது | 12/- |
| பெரிய அறைத்தொகுதியுடன் கூடிய எச். வி. சி. விருந்தினர் விடுதி — வெந்நீர் வசதியுடன் | 50/- |
| சிறிய அறைத்தொகுதியுடன் கூடிய எச். வி. சி. விருந்தினர் விடுதி வெந்நீர் வசதி இல்லாதது | 25/- |
| எஸ். வி. விருந்தினர் விடுதி பெரிய அறைத்தொகுதி (வெந்நீர் வசதியுடன்) | 70/- |
| எஸ். வி. விருந்தினர் விடுதி மூலை அறைத்தொகுதி | 60/- |
| எஸ். வி. விருந்தினர் விடுதி மற்றைய அறைத்தொகுதி | 50/- |
| **என். ஜி. விருந்தினர் விடுதி I & II** | |
| மூலை அறைத்தொகுதி | 60/- |
| மற்றைய அறைத்தொகுதிகள் | 50/- |
| எச். ஆர். ஜி. முழு குடில் | 250/- |
| **எஸ். வி. விருந்தினர் விடுதி** | |
| பெரிய அறைத்தொகுதி எண்; 9 மற்றும் சிறிய அறைத்தொகுதி எண்: 7 மற்றும் 8 | 750/- |
| பெரிய அறைத்தொகுதி எண்: 1 மற்றும் சிறிய அறைத்தொகுதி எண்: 6 | 750/- |
| சிறிய அறைத்தொகுதிகள் எண்: 2, 3, 4, 5, (ஒவ்வொன்றும்) | 250/- |
| ஸ்ரீநிகேதன் (ஒவ்வொரு அறைத்தொகுதி) (எஸ். பி. நகர் விருந்தினர் விடுதி எண்: 4) | 250/- |
| இந்திரா விருந்தினர் விடுதி (ஏ. சி.) ஒவ்வொரு அறைத்தொகுதி (எஸ். பீ. நகர் விருந்தினர் விடுதி எண்: 2) | 250/- |
| பாலகுடீரம் (ஏ.சி.) ஒவ்வொரு அறைத்தொகுதி (எஸ். பீ. நகர் விருந்தினர் விடுதி எண்: 3) | 250/- |
| கோகுலம் (ஏ. சி.) | 500/- |
| டி. பீ. சி. மற்றும் ஏ. டி. சி. குடில்களில் முதல்தளம் முழுப்பகுதி | 60/- |
| அரைப்பகுதி | 30/- |
| எஸ். என். விருந்தினர் விடுதி (அறைத்தொகுதி ஒன்றிற்கு) | 50/- |
| ராம் பகீச்சா விருந்தினர் விடுதி (அறைத்தொகுதி ஒன்றிற்கு) | 50/- |
| **திருமணக்கூடங்கள்** | |
| எஸ். எம். சி. 260, 266, 267, 272. ஒவ்வொரு குடிலுக்கும் நாள் ஒன்றிற்கு | 75/- |
| ரூயா 248 | 100/- |
| கோகினேனி 226 | 100/- |
| சிதம்பரம் செட்டியார் குடில் | 125/- |
| ஏ. டி. சி. 99 | 100/- |
| டி. பி. சி. 71, 136, 152 | 75/- |
| பாலாஜி திருமண மண்டபம் | 500/- |
| சீதாராம திருமண மண்டபம் | 1000/- |




மரமே அரச மரமாம். அஸ்வம் அதில் மறைந்திருந்ததால் அஸ்வத்த எனப் பெயருண்டாயிற்று.

அரசு :

பகவத் கீதையில் பகவான் தனது விபூதி எங்கெங்குள்ளது என்று விளக்கும்போது மரங்களில் தான் அஸ்வத்தமாக இருப்பதாகக் கூறினர். ஆதலின் அஃது விருக்ஷராஜஞக ஆகியது.இதற்கு பிப்பலம் என்றும் மற்ரேர் பெயர் உண்டு. பெற்றேரை இழந்த ஒரு ரிஷிகுமாரனை உணவூட்டி வளர்த்தது அஸ்வதம். பிப்பல பலத்தை (பழத்தை) உண்டு வளர்ந்த ரிஷி பிப்பலாதர்எனப்பட்டார்.தனது தந்தையைக் கொன்ற அரக்கர் குலத்தை அழிக்க ஒரு வேள்வி செய்து பயங்கரமான 'கிருத்யா' என்ற சக்தியைப் படைத்தார். அது

# அஸ்வத்த பிரதக்ஷிணம்

திரு. எஸ். சந்திரமெளலி,
திருப்பதி.

அஸ்வத்தமென்பது அரச மரம். மரங்களில் தெய்வீகமானது. யக்ஞத்திலும் பயன்படுவதால் இதை யாக்ஞக விருக்ஷமென்பர். இதன் சமித்து ஹோமத்திற்குப் பயன்படும். இதன் கிளை அக்னியைக் கடைய பயன்படுவதால் அது அரணி என்ற பெயரால் அழைக்கப் படும். அதிலிருந்து உண்டாகும் அக்னியே அக்னி ஹோத்ரம், இஷ்டி யாகம் இவைகளுக்குப் பயன்படும். அரணியிலிருந்து "சுகாசார்யார்" தோன்றியதால் அவர் 'ஆரணேயர்' என்றழைக்கப்பட்டார். பாண்டவர் களது அரணியை ஒரு மான் தூக்கிச் சென்ற சரிதம் பாரதத்தில் 'ஆரணேய பர்வா' எனக் கூறப்படுகிறது. அர சங்கிளை சில யாகங்களில் யூப மர மாகப் பயன்படும். அதை மற்ற காரி யத்திற்காக வெட்டக் கூடாது. தானே பட்டதைக் கூட அடுப்பெரிக் கக் கூடாது. கோவிலுக்குக் கொடுக்கலாம்.

பெயர் தோன்றிய காரணம்:

அக்னி தேவர்தான் ஸகல தேவர் களுக்கும் பித்ருகளுக்கும் ஹோமம் செய்த பொருள்களைக் கொண்டு கொடுப்பவர். ஒரு சமயம் அந்த கைங்கர்யத்தில் வெறுப்பு தோன்றி தன்னல் அப்பணி செய்ய முடியா தெனக் கூறினர். மற்ெருரு வர் வரும்வரையாவது இக்கைங்கர் யம் புரிய வேண்டும் எனத் தேவர்கள் வற்புறுத்தினர். அக்னி அதை ஏற் காமல் வெளியே சென்ருர். தேவர் கள் அவரைப் பின் தொடர்ந்தனர். உடனே அவர் அஸ்வ ரூபமெடுத்துச் சென்ருர். அதையும் அமரர்கள் பின் தொடர, அவர் ஒரு மரத்தில் தன்னை வயப்படுத்தி மறைந்தார். அந்த அரக்கரனைவரையும் கொல்ல, பிரம்மா அவரை சமாதானப்படுத்தி அந்த கிருத்யையை சமுத்திரத்தில் எறியும்படிச் செய்தார். அந்த 'கிருத்யை' உண்டானது அஸ்வத்த தினடியிலே; போய்ச் சேர்ந்தது சமுத்திரத்திலே.ஆதலால் அரசையும் கடலையும் எப்போதும் தொடலா காது, தரிசனம் செய்தாலே புண் ணியம் என சாஸ்திரம் கூறுகிறது.

கடலில் அமாவாஸ்யை பௌர் ணமி நாட்களில் ஸ்நாநம் செய்ய லாம்.ஸ்திரவாரத்தில் (சனிக்கிழமை) மட்டும் அரசைத் தொட்டு ஆலிங் கனம் செய்யலாம். கடல் ஸ்நானம் செய்யும் பொழுது 'பிப்பலாத சமுத் பன்னே' என்ற சுலோகத்தைக் கூறி மணலைக் கடலில் சேர்க்க வேண்டும். பிப்பலாதரை வளர்த்தது பிப்பல மெனும் அரசு. அது குழந்தையை



ஸ்ரீ சென்ன கேசவப் பெருமாள் கோயில் — புஷ்பகிரி. (கடப்பை மாவட்டம்).

யர்கள் அவரை நிறுத்தி 'என் செருப்பை அல்லது அந்த இடைத் தோலைக் கொடுத்துவிட்டுச் செல்' என்றனர். இந்த வேதியர் வாழ்ந்த காலத்தில் அவர்களிடம் செருப்பை வாங்கிக் கொண்டு விலை கொடுக் காமல் ஏமாற்றிச் சென்றுர். அவர் கள் இப்பொழுது வழிமறித்துப் பல வகையாக ஏசிப்பேசி அவமதிக்கப் பிரும்ம சர்மா என் செய்வார் பாவம், வாய் திறக்க வகையின்றித் தன் வினையை நினைத்துத் தன்னை நொந்து கொண்டார். அப்பொழுது அங்கு திடீரென இரு ப்ரம்மசாரிகள் அவர் கள் முன் தோன்றி 'யாரப்பா நீங் கள்! உங்களுக்கு என்ன வேண்டும்? தனமா? அல்லது செருப்பா? இதோ நான் தருகிறேன்' என்றுர்கள். செக் கிலி வாய் திறவாமல் செல்ல, பிரும்ம சர்மா, 'ஐயா! நீங்கள் யார்? ஆபத்தி லிருந்து என்னை விடுவித்தீர்களே! நான் என்ன உதவி செய்ய முடியும் உங்களுக்கு?' என்றுர். 'ஐயா! உமது மனைவி கூறிய வண்ணம் நீர் ப்ர திஷ்டை செய்து வளர்த்த அஸ்வத்த மரங்கள்தாம் நாங்கள்' என்றனர். பெற்றெடுத்த புத்திரர்கள் கூட இங் ஙனம் உதவ முன் வருவார்களா? என வியந்து கொண்டாடிச் சென்றுர். அத்தகைய பெருமை வாய்ந்தது அரசு.

### அமா—ஸோமவார ப்ரதக்ஷிணம் :

இங்ஙனம் வேதியர் ப்ரதிஷ்டை செய்து விதிப்படி உபநயன, விவாஹ மான அரசமரமே ப்ரதக்ஷிணம் செய் வதற்கேற்றதாம். ப்ரதக்ஷிணமென் பது உடலால் ப்ரணவத்தை எழுது வதாகும். அமாவாஸையன்று அமா மோமவதீ என்ற விரதத்தை ஆரம் பித்து பிரம்ம விஷ்ணு ருத்ர ரூபி யான அஸ்வத்த விருக்ஷத்தை நூற் றெட்டு 'ரத்தினம்' அல்லது 'மணி' அல்லது 'பக்ஷணம்' நிறைந்த தாம்ர பாத்ரம், வெண்கலப் பாத்திரம் அல் லது பழம் முதலியவைகளில் ஒன்றை ஒரு ப்ரதக்ஷிணம் ஆனதற்குக் கணக் காக அரசின் எதிரில் வைத்து நூற்

உண்டு பண்ணும், (அதனின்றும் வீசப்படும் காற்றை சுவாசித்தால் பெண்களது கர்ப்பகோசம் சுத்தியாகி மலட்டுத் தன்மை நீங்கும் என்பது விஞ்ஞானிகளின் தீர்ப்பு) காக்கும், லயமும் செய்து கொள்ளுமாதலால் அஃது பிரம்ம விஷ்ணு ருத்ரஸ்வரூப மாகக் கொண்டாடப்படுகின்றது.

### ப்ரதிஷ்டை: உபநயந: விவாஹம்

பொதுவாக ஒவ்வொருவரும் ஓர் அரசு, வேம்பு, மா முதலிய விருக்ஷங் களை வைத்து வளர்க்க வேண்டுமென சாஸ்திரம் கூறுகிறது. புத்திரன், ஐஸ்வர்யம், ஆரோக்யம் முதலியன விரும்புவோர் இரண்டு அரசுகளை ஒன்றுக வைத்து பிரதிஷ்டை செய்ய வேண்டும். அச்சமயம் தனியான பூஜை, பாராயணம், ஹோமம் முதலி யன செய்தல் வேண்டும். ப்ரதி தினம் அதற்கு ஜலம் விட்டு அதன் ரக்ஷைக்காக அருகில் ஒரு வேப்ப மரம் வைத்து வளர்க்க வேண்டும். ஆயிரம் இலை உண்டானபின், அதற்கு விதிப்படி உபநயநம் செய்விக்க வேண் டும். தண்டம், கிருஷ்ணஜினம், வஸ் திரம், யக்ஞோப வீதம் முதலியவை களை அதனருகே வைத்து மந்திரங் களைக் கூறி பிரும்மோபதேசம் செய்ய வேண்டும். பின்னர் விவாஹமும் கல்பத்தில் கூறிய வண்ணம் செய்ய வேண்டும். ஒரு மண்டலம் விதிப்படி பிரதக்ஷிணமும் செய்தால், மலடிக் கும் குழந்தை பிறக்கும் என்பது சாஸ் திரத்தின் கூற்று. இதை நியமமாய்க் கடைபிடித்து ப்ரத்யக்ஷ பலனை அடைந்துள்ளோர் பலருண்டு. அச்சு தன், அஸ்வத்த நாராயணன் என்ற பெயருள்ளவர்கள் அஸ்வத்த பிர திஷ்டை அல்லது உபநயநம் அல்லது பிரதக்ஷிணம் செய்ததாலுண்டான வர் என்பதற்கடையாளமாகும்.

### புத்திரனைவிடச் சிறந்தது அரசு

பிரும்ம சர்மா எனும் வேதியர் வேத சாஸ்திரங்களில் நிபுணர். ஆனல் கல்விக்கேற்ற அனுஷ்டான மில்லாதவர். தனிகர். எனினும் மேல் மேலும் பொருள் தேடுவதே அவரது விரதம். உத்தமியான அவர் பத்னி ஸுசீலை நற்சமயத்தில் நற்சொற் களால் இரு அஸ்வத்த விருக்ஷங்களை ப்ரதிஷ்டை செய்யும்படிச் செய்தாள். அவர் இறந்தபோது அந்த ஜீவனை யமகிங்கரர் யமபுரிக்கு இழுத்துச் சென்றனர். வழியிலே இரு செக்கிலி

றெட்டு ப்ரதக்ஷிணமானவுடன் உத்ராங்க பூஜையைச் செய்து அவைகளை ஏழைகளுக்களித்து அன்னதானமும் செய்ய வேண்டும். குறைந்த பக்ஷம் ஒரு மண்டல காலமாவது தொடர்ந்து பிரதக்ஷிணம் செய்து மரப்பாச்சி பொம்மைகளை வாங்கி சிறு குழந்தைகளுக்களித்து உத்யாபனம் செய்ய வேண்டும். பலர் இவ்விதம் நோன்பிருந்து நற்பயன் பெற்றதாக புராணங்களிலும், சரித்திரத்திலும், நிகழ்காலத்திலும் பல சான்றுகள் உள்ளன.

### ஸோமவதி வ்ரதக் கதை

பாண்டவப் பூண்டையே அழிக்கத் துரியோதனனுக்குத் துணையாக நின்ற அஸ்வத்தாமா அபாண்டவாஸ்ரத்தை ஏவினான். பகவான் பாண்டவர்கள் ஐவரையும் காப்பாற்றினார். ஆனால் அந்த உக்ரமான அஸ்த்ரம் அபிமன்யுவின் மனைவியான உத்தரையின் கருவிலுள்ளக் குழந்தையைக் கொல்ல முயற்சித்தது. 'தர்மர்' 'குந்தி' முதலியவர்கள் பீஷ்மரை வணங்கி வம்ச பீஜத்தைக் காக்கும்படி வேண்டினர். அவர் "அமாஸோமவதீ வ்ரதத்தை 'உத்தரை' 'ஸுபத்ரை' 'த்ரௌபதி' ஆகியவர்கள் செய்யட்டும். குழந்தை ஆபத்திலிருந்து விடுபடுவான். சிரஞ்ஜீவியாக வாழ்வான்" என்று கூறி அந்தவிரதத்தைஅனுஷ்டித்துப் பயனடைந்தவர்களின் சரிதத்தையும் கூறினார்.

### குணவதி சரிதம்

முக்தி புரியான காஞ்சி மாநகரை 'ரத்னசேனன்' எனும் அரசன் மனுநீதி தவறாமல் ஆட்சி புரிந்து வந்தான். அவன் காலத்தில், 'தேவஸ்வாமி' என்ற வேதியர் அங்கு 'தனவதீ' எனும் தர்மபத்னியுடன் நித்ய கர்மாக்களை நன்கு அனுஷ்டித்து வந்தார். அவருக்கு ஏழு புத்ரர்களும் குணவதீ என்ற ஒரு புத்ரியும் இருந்தனர். புத்திரர்களுக்கெல்லாம் மணமாகி தேவஸ்வாமிக்கு ஏழு மருமகள்கள் வந்தனர். வழக்கமாகபிக்ஷைக்குவரும்ஒருபிராமணன், மருமகள்கள் பிக்ஷை அளிக்கும் பொழுது 'தீர்க்க சுமங்கலீபவா' என ஆசீர்வாதம் செய்வார். மகள் குணவதி பிக்ஷை அளித்தால் 'தர்மவதியாக இரு' என ஆசீர்வதிப்பார். சகோதரன் மனைவிகளுக்கு மாத்திரம் சுமங்கலியாக இரு என்று கூறி எனக்கு மாத்திரம் தர்மவதியாக இரு என்கிறாரே! ஏன் அப்படிக் கூறுகிறார்? என்று குணவதி தாயைக் கேட்க,'மறுமுறை பிக்ஷை அளிக்கும் போது நானும் வருகிறேன்' என்று பெண்ணை பிக்ஷை இடச்சொல்லி கவனித்தாள். அவர் அங்ஙனமே கூற 'ஏன் இங்ஙனம் கூறுகிறீர்?' என்று கேட்டாள். 'உண்மையைக் கூறினால் சிறிது வருத்தமாகத்தான் இருக்கும். என்றாலும் கேட்டதால் சொல்லாமல் இருக்க முடியவில்லை. இவளுக்குக் கல்யாணமாகி ஸப்தபதி என்ற கர்மா நடக்கும்பொழுது 'பதி' இறந்து விடுவான். இவள் விதவை ஆவாள்.' என்று கூற, தாய் அவரைப் பணிந்து, 'அவள் விதவை ஆகாமல் இருக்க ஏதாவது வழிவகைகள் இருந்தால் கூறுங்கள்!' என்று வேண்டினாள்.

அதற்கு அந்த பிக்ஷு சிம்மலத்வீபத்திலுள்ள 'ஸோமவதி' என்ற வண்ணாத்தியை அழைத்து வந்து அவள் எதிரில் விவாஹம் செய்தால் விதவை ஆகமாட்டாள்.' என்றார். இதைக் கேள்விப்பட்ட தந்தை புத்திரர்களைக் கூப்பிட்டு, 'ஸோமவதி'யை இங்கு அழைத்து வரும்படிக் கூறினார். பிள்ளைகள் "நூறு யோஜனை தூரத்திலுள்ள த்வீபம் செய்து 'சோமவதியை' அழைத்து வந்து பெண்ணை சுமங்கலி ஆக்க முயல்கிறீர்கள்! ஆனால் புத்திரர்களிடத்தில் அவ்வளவு அன்பிருந்தால், எங்களை கடல் கடந்து போகச் சொல்வீர்களா?" என்றார்கள். உடனே சிவஸ்வாமி என்ற ஏழாவது புத்திரன் "நான் சென்று ஸோமவதியை அழைத்து வருகிறேன். எனக்கு உத்திரவு கொடுங்கள்' என்று கூறி, சகோதரியுடன் கிளம்பினான். வழிநடந்து கடற்கரைக்குச் சென்று கடலை எப்படிக் கடப்பது? என்று சிந்தை கொண்டிருந்தான். ஆங்குள்ள ஓர் ஆலமரப் பொந்தில் கழுகின் குஞ்சுகளைப் பார்த்து, அவைகளுடன் பேசிக்கொண்டு பகல் வேளையைக் கழித்தான். தான் வந்த காரியத்தையும் வழியில் உணவின்றி வருந்தி வந்ததையும் கூறினான். மாலையில் குஞ்சுகளின் தாய் தந்தை ஆகாரம் தேடிக் கொண்டு வந்து, வழக்கப்படி அவைகளை உண்ணும்படிக் கூறின. ஆனால் அவைகள் மிக்க வருத்தத்துடன் உண்ணாமலும் பெற்றோருடன் சந்தோஷமாக பேசாமலுமிருந்ததையும் கண்டு என்ன காரணம் என்று வினவின. 'தந்தையே! நமது அருகில் உணவின்றிக் களைத்துப் படுத்திருக்கும் விருந்தினர்களைவிட்டு நாங்கள் மாத்திரம் புசிப்பது நியாயமா?' என்றன.

இதைக் கேட்ட கழுகு அவர்களை நோக்கி,வந்த விஷயத்தை விசாரித்து சிறிது உணவை அவர்களுக்கு அளித்து சாப்பிடும்படியும், மறுநாள் காலையில் தான் அவர்களை சிம்மலத்வீபத்தில் கொண்டு விடுவதாகவும் கூறிற்று. அங்ஙனமே புஜித்த அவர்களை சிம்மலத்வீபத்தில் ஸோமவதி வீட்டருகே கொண்டு விட்டன. அவர்கள் அவ்வீட்டருகே ஓரிடத்தில் தங்கி காலையில் ஒருவரும் காணாமல் அவளது வீட்டு வாசலைப் பெருக்கி மெழுகிக் கோலமிட்டு வந்தார்கள். இங்ஙனம் ஓர் ஆண்டு சென்றபின் ஸோமவதி அதைக் கவனித்து மருமகள்களை, 'யார் அழகாகக் கோலமிட்டது? என வினவினாள். அவர்கள் நான்தான், நான்தான் என்று கூறியவுடனே, ஸந்தேஹம் தோன்றி மறுநாள் காலையில் இருட்டில் எழுந்து வந்து கவனித்தாள். குணவதியையும், சிவஸ்வாமியையும் கண்டு ஆச்சர்யமடைந்து, 'நான் தாழ்ந்த ஜாதியில் பிறந்த வண்ணாத்தி. உயர்குலத்தில் பிறந்த பிராம்மணர்கள் இங்ஙனம் எனக்குத் தொண்டு செய்வது அநீதி. எனக்கு அது பல வகைத் துன்பங்களைத் தரும். எனது

பாபமகல நான் உங்களுக்கு என்ன செய்ய வேண்டும்?' என வினவினுள். அவர்கள் இப்பெண்ணின் விவாஹ காலத்தில் அவள் விதவை ஆகாமல் காக்கத் தாங்கள் எங்களுடன் காஞ்சி நகரம் வர வேண்டுமென்றுர்கள். ஸோமவதி அதற்கிசைந்துத் தன் மருமகள்களைப் பார்த்து, 'நான் வருவதற்குள் எவரேனும் இறந்தால் அவர்கள் உடலைக் கொளுத்த வேண்டாம்'. என்று கூறி, தனது மஹிமையால் அவர்களையும் ஆகாயமார்க்கமாக அழைத்துச் சென்று கடலைக் கடந்துத் தானும் காஞ்சி நகரம் வந்து சேர்ந்தாள்.

பெற்றேர் பேரானந்தமடைந்து உஜ்ஜயினீ தேசத்தைச் சார்ந்த ருத்ர சர்மா என்ற வரனை அழைத்து விதிப்படி விவாஹம் செய்தார்கள். முக்கியமான ஹோமம் முடிந்து 'ஸாப்தபதீநம்' என்ற ஏழடி நடந்து மனைவியின் காலைத் தூக்கி அம்மி மீது வைக்கும் போது கால் இடறி பதி கீழே விழுந்தான். உடனே உயிர்த் துறந்தான். மணக்கோலம், பிணக்கோலமானதைக் கொண்டு எல்லோரும் வாய் விட்டுக் கதறினர். ஸோமவதியால் அவன் பிழைக்கக்கூடும் என்ற நம்பிக்கையிருந்தாலும், கண்ணுல் கண்ட அந்தத் துக்கம் எல்லோரையும் கலக்கிற்று. 'வ்ரத ராஜமெனும்' அமா-ஸோம வார பூஜா பலனைக் குணவதிக்குத் தானம் செய்தாள் ஸோமா. தூங்கி எழுந்ததுபோல் மரித்தவன் எழுந்திருக்க, துக்கக் கடல் ஆனந்தக் கடலாக மாறிற்று. அனைவரும் ஸோமவதியைக் கொண்டாடி, இறந்தவர்களையும் உயிர்த்தெழச் செய்யும் மகிமை வாய்ந்த அந்தப் புனித விரதத்தைத் தாங்களும் அனுஷ்டிக்க இச்சை கொண்டு ஸோமவதியிடமிருந்து அந்த விரத நியமங்களைக் கற்றறிந்தனர். பிறகு ஏனையோரிடம் விடை பெற்று ஆனந்தமாய்த் தன்னிடம் திரும்பினுள்.

ஸோமவதி ஸிம்மலத்வீபம் வந்தவுடன் தனது பதியும், புத்திரர்களும் இறந்து கிடக்க, இவள் கூறிச் சென்ற வண்ணம் அவ்வுடல்களை ரக்ஷித்து அவளிடம் ஒப்படைத்தனர். அதிர்ஷ்டவசமாக அன்று ஸோமவாரமும் அமாவாஸ்யையும் சேர, விதிப்படி அந்த விரதத்தை கடைபிடிக்க எண்ணி, தூய நீராடி விரதமாரம்பிக்கும்பொழுது ஒரு கிழவி அருகில் வந்து 'பெண்ணே! என் தலை பாரத்தை இறக்கி, என் தலைவலியைச் சற்று அகற்று' என வேண்டினுள். 'அப்படியே ஆகட்டும் அது என்ன மூட்டை?' என்றுள் ஸோமவதி. 'வேறென்றுமில்லை. இது பஞ்சு மூட்டைதான்' என்றுள் கிழவி. 'அம்மா இந்த விரதம் செய்வோர் பஞ்சைத் தொடக்கூடாதே! ஆதலால் வேறு எவரையேனும் இறக்கச்சொல்' என்றுள். அதே போல் மற்றெரு கிழவியும் வந்து, தன் தலை பாரத்தை இறக்கி எனக்கு உதவி செய் என்றுள். ஆகட்டும், அதில் என்ன இருக்கிறது என வினவ அவள் கிழங்கு மூட்டை தான் என்றவுடன், 'அம்மா! இன்று அமா-ஸோமவார வ்ரதம் செய்வதால்இதையும் தொடுவதற்கில்லையே' என்று கூறி விரதமாரம்பித்தாள். சர்க்கரையைப் பிடிப்பிடியாகப் போட்டு அரசை நூற்றி எட்டு பிரதக்ஷிணம் செய்வதற்குள் அனைவரும் பிழைத்தெழுந்தனர். இதைக் கண்டு மருமகள்கள் அவர்கள் இறந்ததற்குக் காரணம் யாதென வினவ 'அந்த விரத பலனை நான் குணவதிக்குத் தானம் செய்து விட்டேன். ஆதலால் அவர்கள் இறந்தனர். நான் மீண்டும் அவ்விரதத்தை முறைப்படி மேற்கொண்டதால் மாண்டவர் மீண்டனர்' என்றுகூறி பதி ஸுதர்களுடன் பல்லாண்டு அந்த விரதம் செய்து இனிது வாழ்ந்து முடிவில் வைகுண்டம் சென்றுள் ஸோமவதி எனும் வண்ணுத்தி.

பீஷ்மர்: 'தர்மா! பொருளில்லாதவர் பக்ஷ்யம், புஷ்பம், பழம் முதலியவைகளாலும் இதைச் செய்யலாம். ஆரம்பத்திலும் பன்னிரண்டாவது வருடத்திலும் பன்னிரண்டு கலசங்கள் வைத்து, மும்மூர்த்திகளையும், திசைக்கேற்றவாறு மற்ற தேவதைகளையும் ஆவாஹனம் செய்து பூஜித்து பிரதக்ஷிணம் செய்து உபவாஸத்துடன் இரவு கண் விழித்துக் கதை கேட்க வேண்டும். மறுநாள் கலசங்களுக்கு புன:பூஜை செய்து அஷ்டாக்ஷரியால் ஹோமம் செய்து அன்னதானம் தக்ஷிணைகளைத் தந்து பிறகு பாரணை செய்ய வேண்டும்' என்றுர். அதன்படி ஸுபத்ரை, திரௌபதி, உத்தரை முதலியவர்கள் அந்த விரதத்தைச் செய்தனர். அதனுல் உத்தரைக்கு கர்பம் அழியாமல் பரீக்ஷித் என்னும் குழந்தை பிறந்தது. ஒரு முறை கௌதம சாபத்தால் உடலெல்வாம் கண்களாகப் பெற்ற இந்திரன் அரசில் ப்ரம்ம விஷ்ணு, மஹேஸ்வரர்களை ஆவாஹனம் செய்து வேண்ட அந்த மரத்தில் தாணுமாலயமூர்த்தியாகத் தோன்றி இந்திரனின் சாபத்தை நீக்கி, அவனுடலைச் சுத்தப்படுத்தினர். அந்த திருத்தலமே சுசீந்த்ரம் என வழங்கப்படும் திருத்தலமாகும்.

இவ்வாறு பல பெருமைகளைப் பெற்று வானளாவ வளர்ந்து ராஜ கம்பீரமாய் நிற்கும் அரச மரத்தை வலம் செய்து இக பர நலன்களைப் பெறுவோமாக!

★



# மங்களகிரி

திரு. S. லக்ஷ்மிநரசிம்மன்,
விஜயவாடா.

"யஸ்ய ப்ருதிவீ சரீரம்ய: ப்ரதிவீம்
அந்தரே ஸஞ்சரந்
யம்ப்ருதிவீ நவேத ஸர்வபூதாந்
தராத்மா
அபஹத பாப்மா திவ்யோ தேவ
ஏகோ நாராயண:"

என்கிறபடி எல்லாம் நாராயணனே தன்னில் அடக்கி ஆள்கிறான் என்பது புலனாகிறது.

'ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்' என்பது எல்லாம் வல்ல சர்வ வல்லவனும் சர்வ வ்யாபியுமான நாராயணன் இப்பூவுலகில் பல அவதாரங்கள் எடுத்து பக்தர்களை அனுகிரகித்தும் துஷ்டர்களை சம்ஹாரம் செய்தும் வந்துள்ளார். இவ்வாறான தசாவதாரங்களில், ஒரு சிறு பாலகனான பிரகலாதனுக்கு அவனுடைய இடைவிடாத பக்தியின் காரணமாக அவன் கோரிய தூணில் க்ஷண நேரத்தில அவதரித்த அவதாரம ஸ்ரீ நரசிம்ம அவதாரம் ஆகும். நமது பாரத தேசத்தில் ஸ்ரீ நரசிம்மருக்கு பல திவ்ய தேசங்கள் உள்ளன. அதில் ஆழ்வார்கள் மங்களா சாசனம் செய்ததும், புராண வரலாறு கொண்டதும், மேலும் பல அபிமான ஸ்தலங்களும் உள்ளன. இதில் புராண வரலாறும் அபிமான ஸ்தலமாகத் திகழ்வது 'மங்களகிரி' என்கிற திவ்ய க்ஷேத்திரம். இங்கு லக்ஷ்மி தேவி தவம் இருந்து வந்ததாகவும், ஸ்ரீ நரசிம்மன் ஹிரண்ய சம்ஹாரம் ஆனபிறகு இங்கு வந்து சாந்தமானதாகவும் புராணங்களும், தலபுராணக் கதைகளும் கூறுகின்றன. இந்த மலை மேல் லக்ஷ்மி தவம் இருந்ததால் மங்களம் அளிக்கும் மலை அதாவது மங்களகிரி என இந்த திவ்ய க்ஷேத்திரம் பெயர் பெற்றது. இந்த க்ஷேத்திரத்தைப் பற்றி இங்குப் பார்ப்போம். இந்த அழகிய திவ்ய தேசம் ஆந்திராவில் விஜயவாடாவுக்கு 8 கிலோ மீட்டர் தூரத்தில் அமைந்துள்ளது. பஸ், ரயில் வசதிகள் உள்ளன. கிருஷ்ணா நதி தீரத்தில் அமைந்து இருப்பதால், இவ்வூர் மிகவும் பசுமையாகவும் செழிப்பாகவும் உள்ளது.

இங்கு மலைமேல் எழுந்தருளி இருக்கும் பெருமாளுக்கு 'பானக நரசிம்மர்' என திவ்ய திருநாமம். (அதாவது மூலவர் ஸ்வயம்புவாக பில ரூபத்தில் எழுந்தருளி உள்ளார்) மேலும் இந்த பெருமாளின் உள்தாடையில் சங்கு சக்கரம் அமைந்து இருப்பது எங்கும் காணாத விந்தையாகும்.

"க்ருதே ஸுதாமப்த்தி பாவாம் |
த்ரேதாயா மாஜ்ய முத்தமம் ||
த்வாபரே காமதுக்ஷ க்ஷீரம் |
கலௌ கண்ட குடொதகம் ||"

என்கிறபடி இங்கு வீற்று இருக்கும் ஸ்ரீ நரசிம்மர் க்ரத யுகத்தில் அமிருதத்தையும், த்ரேதாயுகத்தில் பசும் நெய்யையும், த்வாபர யுகத்தில் பசும் பாலையும் நிவேதனமாக ஸ்வீகரித்து வந்ததாகவும் இநத கலியுகத்தில் வெல்லத்தினால் செய்த பானகத்தை ஸ்வீகரித்து வருகிறார் என்பது தொண்டு தொட்டு வரும் நிகழ்ச்சியாகும்.

மேலும் இந்த நரசிம்மருக்கு எவ்வளவு பானகம் வாயில் சமர்ப்பித்தாலும் பாதியை மீற்றி, ஸமர்ப்பித்தபக்தர்களுக்குக் கிடைக்கச் செய்கிறார் என்பதும் கண்கண்ட உண்மையாகும். ஸ்ரீ பெருமாள் சந்நதிக்கு வலது புறம் தாயார் சந்நதி உள்ளது. தாயாரின் திருநாமம் மஹாலக்ஷ்மி. (ஸ்வயம்புவாகவே ஏள்ளி உள்ளார்)

மேலும் சப்தரிஷிகள் இங்கு இரவு நேரங்களில் வந்து பூஜை செய்வதால் காலை 8 மணி முதல் மதியம் 1 மணி வரை மலை மேல் சேவை நடக்கிறது.

மலை அடி வாரத்தில் ஸ்ரீ லக்ஷ்மீ நரசிம்ம ஸ்வாமி கோயிலும் உள்ளது. இங்கு மூலவர் திருநாமம் ஸ்ரீ லக்ஷ்மீ நரசிம்மர். தாயாரின் திருநாமம் இராஜ்யலக்ஷ்மி. இங்குக் கிருஷ்ணதேவராயர் பல கைங்கரியங்கள் செய்து உள்ளதாக சில சாஸனங்கள் கூறுகின்றன.

இந்த திவ்ய க்ஷேத்திரம் பண்டைய காலம் முதல் இன்று வரை ஒரு முக்கிய திவ்ய தேசமாகக் கருதப்பட்டு வருகிறது. இங்கு அனுதினம் பல பக்தகோடிகள், பல இடங்களில் இருந்து வந்து சேவித்துச் செல்கிறார்கள்.

இங்கு நரசிம்ம ஜயந்தி, யுகாதி, வைகுண்ட ஏகாதசி முதலிய விழாக்கள் சிறப்பாக நடக்கின்றன.

பாஞ்சராத்ர ஸம்ப்ராதயம் மூலம் கோயிலின் பூஜைகள் நடந்து வருகின்றன. ஆயின் நமது ஆழ்வாரின் பாசுரங்களும் அனுதினம் சேவித்து வருவது எனப்படுவது மிகவும் பெருமையாகக் கூறப்படுவது ஆகும்.

மேலும் இங்கு ஏள்ளி இருக்கும் உத்ஸவர் ஸ்ரீ நரசிம்மர். அவருக்கும் சிம்ம ரூபமாகவே திருமுகம் அமைந்து உள்ளது. இவ்வாறு வேறு எங்கும் காண முடியாததாகும்.

மேலும் ப்ரம்மோஸ்சவமும் நடந்து வருகிறது. இது ப்ரமகைரவர்த்த புராணத்தில்,

"போஜந ச்ருணு வக்ஷக்ஷேஹம்
நவாஹனி ட்ருகேஸரிம்
ஸர்வாபாப ஹரம் திவ்யம்—ஸர்வ
லோக ஸுபாவஹம்.

எனக் கூறப்படுகிறது.

இவ்வாறு க்ரதயுகம் முதல் பிரசத்தி பெற்ற இந்த புண்ணிய க்ஷேத்திரத்தை பக்த கோடிகள் வந்து சேவித்து அவனுடைய பரிபூர்ண கடாக்ஷத்தைப் பெற வேண்டும் எனப் பிரார்த்திக்கிறேன்.

"மங்களாத்திரி நிவாஸாய ஸ்ரீ
நிருஸிம்மாய மங்களம்".

என்று போற்றிப் பாடுவோமாக.

— ஸ்ரீ ஹரி-சென்னை-71. ✲ சித்திரம் : சுசி.

## 29. உனக்கே ஆட்செய்வோம் !

''திருமாமணியே! அதிவிடியற்காலையில் உன் அரண்மனைக்கு வருகை தந்து உன் செம்பொற்கழலடிகளைப் போற்றிச் சேவிக்கின்றோம். சேவித்து, உன் பசும்பொன் திருவடிக் கமலங்களை நாங்கள் பல்லாண்டுபாடி இசைக்கும் பொருளைப்-பயனைக் கேட்டருள்வாய்.

தியாகம், பொறுமை போன்ற நற்பண்புகளுக்குத் திருவுருவங்களாய்த் திகழும் பசுக்களையும், காளைகளையும் மேய்த்து, அவை தரும் செல்வங்களுடன் உண்டு வாழ்ந்து வருகின்ற ஆயர்குலத்தில் அவதரித்தாய் நீ! தேவாதி தேவர்கள் எல்லாம், உன் காக்குங்கருணை வேண்டித் திருப்பாற்கடலில் கால் கடுக்கக் காலங்காலமாய்க் காத்துக் கிடக்க ஆயர்குலத்தில் வந்து தோன்றிய துளசிமணி மார்பனே, சிற்றறிவு பெற்ற எங்களிடம் எங்கள் அந்தரங்கக் கைங்கரியத்தைப் பெற்றுக் கொள்ளாமல் விட்டுவிடக் கூடாது.

இன்று நீ திருவருள் கொண்டு அளிக்கப்படும் திருவருள் (பறை) கொள்வதற்காக,அன்று நாங்கள் அனைவரும் இங்கு வந்தோம். நீ எடுக்கும் எந்தப் பிறவி அல்லது அவதாரங்களிலும், ஈரேழு பிறவிகளிலும் முக்காலத்திலும் உன்னோடேயே உறவு உடையவர்கள் ஆவோம். செங்கமலக் கண்ணனே!

உன் திருவடி நிழலில் உறவு பெற்று இருப்பதைவிட, வேறு மற்றைய ஆசை-பாசம்-காமம் போன்ற உணர்ச்சிகள் மனதில் எழாமல்-ஏழ்ஏழ் பிறவிகளிலும் அருள்புரிவாய். உயிர் உள்ளவரை உனக்கு மட்டுமே கைங்கர்யம் செய்து வாழ்வோம்.'' என்று பகவான் **ஸ்ரீகண்ண** பிரானின் திருப்பாதக் கமலங்களைப் போற்றிச் சேவிக்கின்றாள் ஸ்ரீ கோதை.

**சிற்றஞ் சிறுகாலே வந்துன்னைச் சேவித்துன்**
**பொற்றா மரையடியே போற்றும் பொருள்கேளாய்;**
**பெற்றம்மேய்த் துண்ணும் குலத்தில் பிறந்துநீ**
**குற்றேவல் எங்களைக் கொள்ளாமல் போகாது;**
**இற்றைப் பறைகொள்வான் அன்றுகாண் கோவிந்தா!**
**எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் உன்தன்னோடு**
**உற்றோமே ஆவோம்; உனக்கே நாம் ஆட்செய்வோம்!**
**மற்றைநம் காமங்கள் மாற்றேலோ ரெம்பாவாய்!**

''பற்றுக பற்றற்றான் பற்றினை'' என்பார் திருவள்ளுவர். பற்று-ஆசை-நேசம் இவற்றால் தோன்றுவது துன்பமே அன்றி இன்பமில்லை. அவற்றால் வேதனை-வெறுப்பு-தொல்லை-துயரமே அன்றி மன அமைதி இல்லை. அவை என்னதான் கட்டுப்படுத்திடினும் மேன்மேலும் எழும்; தோன்றும். இவை தோன்றாமல்-எழாமல் இருக்கச் செய்ய இறைவனின் திருவருளால் மட்டுமே முடியும்.

இதுவரை ஆயர்குல ஆரணங்குகள் 'பறை, பறை' என்று கூறி வந்தார்களல்லவா? இப்பாசுரத்திலே 'பறை கொள்வான் அன்று' என்று தங்கள் அந்தரங்க பிரியத்தை வெளியிடுகிறார்கள். ஸ்ரீ கண்ணபிரானின் கமலத் திருவடிகளில் நித்திய கைங்கர்யம் புரிவதுதான் 'தலையாயப்பணி-நோக்கம்' என்று உணர்த்துகின்றனர்.

''கேளாய்:'கொத்தலர் பூங்குழலாள்-மைத்தடங்கண்ணினாளின்-நப்பின்னையின்-கோட்டுக்கால் கட்டிலின் மேல், மெத்தென்ற பஞ்ச சயனத்தின் மீதேறி-நம் எண்ணமெலாம் ஈர்க்கும் வண்ணம் அவள் கொங்கை மேல் சாய்ந்திருக்கும் உன் எண்ணங்களையெல்லாம் விட்டு நாங்கள் வேண்டுகின்ற வேண்டுகோளை கேளாய்', இப்படிப் பீடிகை போட்டுப்பின் தங்கள் உத்தேசத்தைத் தெளிவுபடுத்துகின்றனர்.மாடு கன்றுகளைமேய்த்து அவை தரும் செல்வத்தால் உண்டு வாழ்பவர்கள் நாங்கள்; ஆன்றோர் சான்றோர்க்குரிய தகைசால் பேரறிவு எங்களுக்கு இல்லை. இருப்பினும் எங்கள் குலத்தில் வந்து தோன்றினாய் நீ.''

''இங்கு வந்து பிறந்தது ஏன் என்று நினைத்தாலே போதும் நீ. எனவே தெரிந்தோ தெரியாமலோ சிறுசிறு பிழைகள் செய்யக் கூடும். அந்தச் சிறுசிறு பிழைகளைப் பெரிதுபடுத்திக் கொண்டு, நாங்கள் உளமார செய்யும் குற்றேவல்... கைங்கர்யத்தை ஏற்காமல் விட்டு விடக்கூடாது''; இப்படி விண்ணப்பித்ததும் கண்ணபிரான், 'அப்படியே ஆகட்டும்; குற்றேவல் ஏற்கிறேன். மார்கழி நோன்பிற்கு வேண்டியவற்றையும் தருகிறேன்', என்று ஒரு பறை அளித்தான். உடனே, 'பறை கொள்வான் அன்று காண்' என்றுகூறி 'உன்னைவிட்டு அகலாமல் உனக்கே நாம் ஆட் செய்வோம்' என்று இறுதியாகவும் உறுதியாகவும் கூறிவிடுகின்றனர். இப்பாசுரத்தின் உட்கரு 'உபய ஸ்வரூபத்தை' விவரிப்பதே ஆகும்.

**'' புள்வாய் பிளந்த புனிதா என்று அழைக்க**
**உள்ளே நின்று என்உள்ளம் குளிரும் ஒருவா**
**கள்வா! கடல்மல்லைக் கிடந்த கரும்பே!**
**வள்ளால் உன்னை எங்ஙனம்நான் மறக்கேனே!'**

என்று திருமங்கையாழ்வார் போற்றுதலும், ஸ்ரீ ஆண்டாள் ஆண்டவனிடம் ஆடிப்பாடி வேண்டுவதும், உலக உயிர்கள் துன்பம்-இன்னல் நீங்கி வாழ வேண்டும் என்பதற்காகவே யன்றோ!

# 30. 'திருமால் திருவருளே' இன்பம்

''திருப்பாற் கடலைத் தன் அருட்கிருபையால் கடையச் செய்து தவர்களுக்கு அமிர்தம் வழங்கி அருளிய பாற்கடல் பரமனே!

குளிர்ச்சியையும், இன்பத்தையும் பொழிகின்ற தண்ணிலவாய், பொன்னிலவாய், வெண்ணிலவாய் பேரொளி தண்சுடர் விடுகின்ற கோலக் குளிர் நிலவுகளாய், கனிவும் பணிவும் கயல் விழிகளில் பூத்திருக்க, கருத்தினிலே-கண்ணனைக் காண வேண்டும்; கண்டு கணநேரமும் பிரியாதிருந்து பெருங்கருணைப் பெற்றுய்ய வேண்டும் என்ற பேருவகை மலர்ந்திருக்க அணி மணி ஆபரணங்கள் கழுத்திலும், காதுகளிலும், இடையிலும் தொடையிலும், கரங்களிலும் வண்ணச் சிறடிகளிலும் அசையவும், அசைந்தசைந்து ஒலிக்கவும் வந்து, உன் சன்னதியில் உன் மலர்ச் சிலம்படியைப் போற்றி வணங்கிறோம்.

திருஆய்ப்பாடியில் போற்றி வணங்கித்தங்கள் புருஷார்த்தத்தைப் பெற்றுக் கொண்ட அப்புனித வரலாற்றை-அழகும் பசுமை எழிலும் ஒருங்கே அமையப் பெற்ற ஸ்ரீவில்லிபுத்தூரில், பிருந்தாவனத்தில் அவதரித்த, பசும்பொன்னிற மொத்த, குளிர்ந்த செந்தாமரை மலர்களால் தொடுக்கப்பட்ட திருமாலையை அணிந்த-ஸ்ரீபெரியாழ்வாரின் திவ்யத் திருமகளாக வளர்ந்த ஸ்ரீகோதையாகிய அடியேன் அருளிச் செய்த-முச்சங்கமும் முக்காலமும் போற்றித் துதிக்கின்ற முப்பது தேன் மலர்களை ஒத்த முப்பது பாசுரங்களையும் கண்ணுங் கருத்துமாய், மனம் மொழி செயலால் தப்பாமல், இக்காலத்திலே இவ்வண்ணமாக ஓதுகிறவர்கள்... இன்னிசையோடு இசைப்பவர்கள்...

நான்கு பெரு மலைகள் போன்ற திருத்தோள்களையும், சுயம்பிரகாசமாய்ப் பிரகாசிக்கும்' திருப்பாத கமலங்களையும், செந்தாமரை புஷ்பம் ஒத்த மலர்ந்த செங்கண்களையும், செல்வத்துட் செல்வமான இலட்சுமி தேவியையும், பூதேவியையும் தன் நெஞ்சிலே நிலைபடுத்திய துளசி மணி மார்பையும் உடைய, திருவேங்கட மாமலை பேரருளான திருமாலின் திருவருளை பெற்று என்றென்றும், எங்கெங்கும் பெறுவர் இன்பமே! ஆனந்தமே!' என்று ஸ்ரீகோதையாள், பகவானின் திருவருள் பெரும்பயனை உணர்த்துகிறாள் உலக உயிர்களுக்கு.

வங்கக் கடல் கடைந்த மாதவனைக் கேசவனை,
 திங்கள் திருமுகத்துச் சேயிழையார் சென்றிறைஞ்சி
அங்கப்பறை கொண்டவாற்றை, அணிபுதுவைப்
 பைங்கமலத் தண் தெரியல் பட்டர்பிரான் கோதை சொன்ன
சங்கத்தமிழ் மாலை முப்பதும் தப்பாமே
 இங்கு இப்பரிசுரைப்பார், ஈரிரண்டு மால்வரைத்தோள்
செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால்
 எங்கும் திருவருள் பெற்று இன்புறுவ ரெம்பாவாய்.

முத்துக்கள் போன்ற இந்த முப்பதையும் யார்யார் உண்மையான பக்தி சிரத்தையுடன் இசைக்கிறார்களோ அவர்களுக்கு யாரால் என்ன நன்மைகள் கிடைக்கும் என்பனவற்றை விவரிக்கின்றாள் கோதை.

'இப்பாசுரத்தில்',இதய சுத்தியுடன் இசைத்துப் போற்றுவார்க்குத் திருமாலின் திருவருள் எந்தச் சோதனையிலும், எந்த நெருக்கடியிலும் வந்து கை கொடுக்கும்; கடும் சோதனைகளிலிருந்தும், துன்பங்களிலிருந்து விடுபட்டுப் பேரின்பம் பெறுவர்; பேரானந்தமுற்று இன்புறுவர்'-என்கிறாள் நாச்சியார்.

'வங்கம்' என்றால் அலைகள்.தேவகாரியமென்று ஒரு வியாஜயத்தையிட்டுப் பெரிய பிராட்டியாகிய பெண்ணமுதத்தைப் பெறுகைக்காகக் கடல் கடைந்தபடி,கண்ணனும்,உலகோர் காரியத்தை ஒரு வியாஜயமாக்கி இவர்களைப் பெறுவதற்காக திருஆய்ப்பாடியில் நோன்பு நோற்கச் செய்தான்.

மாதவன்: அடியவர் குற்றத்தைப் புருஷாகாரத்தாலே-சிறந்த வீரம் வீர்யமிக்க அபூர்வ ஆற்றல் மிக்க தர்மமே உருவான நெஞ்சத்தாலும், அருள்உள்ளம், கருணை மனத்தாலும் பொறுப்பித்து, தீமையே செய்திடினும் 'நாராயணா' என்னும் நாமம் நினைப்பதால் அதனை நன்மையாக ஆக்கிக் கொள்ளும் பிராட்டியை அருகே உடையவன்-ஆவான்.

சேயிழை: நெய் - பால் - மை - மலர் - அணிமணி வேண்டாம்-என்று ஒதுக்கியவர்கள், ஸ்ரீ கிருஷ்ண கைங்கரிய நோன்பு வெற்றி பெற்றதால், கண்ணனும் நப்பின்னையும் உளம்உவந்து அளித்த சூடகம், தோள்வளை, தோடு, செவிப்பூ, பாடகம் போன்றவற்றை அணிந்து கொள்வதால் 'சேயிழை' ஆயினர் அன்றோ!

கன்னியர்கள் குழுமி இசைக்கும் தமிழாகவும், செந்நாப் புலவர்க் குழுக்கள் போற்றி வணங்கிய தமிழ் எனவும் 'சங்கத் தமிழை'க் கொள்ளலாம். திருஆய்ப்பாடியில் கோபியர், கிருஷ்ணாநுபவத்தால் பெற்ற பாக்கியத்தை ஸ்ரீ கோதை பகவான் அநுக்கிரகத்தாலே பெற்றாள். காலத்தை வென்ற, விலை மதிக்க முடியாத இம்முப்பது ரத்தினங்களையும் எக்காலத்திலும் இசைத்துப் பெரும்பயன் பெறமுடியும்.'இப்பிரபந்தத்தை இயற்றியது அடியேனே என்பதையும் தன் திருநாமத்தை இதில் குறிப்பிடுகின்றாள் ஸ்ரீ கோதை. எனவே நாமும் நம் வாழ்க்கையில், துன்பம்-தொல்லை-துயரம் நீங்கி, பக்தி, ஆரோக்கியம், இன்பம் பெற்று ஸ்ரீ ஆண்டாள் அருளிய 'திருப்பாவை'யின்படி மனம்மொழி செயலால் கடமையாற்றிப் பேரின்பம்—பேரருள்—பெருங்கருணை பெறுவோமாக.

முற்றும்.

# வைகுந்த நாதனுக்கு ஒரு வைர மாலை

பின்னுரை :

"மாதங்களில் நான் மார்கழி" என்று பகவான் ஸ்ரீ கண்ணபிரான் திருவாய் மலர்ந்துள்ளான். எனவே, அரங்கத்து அரவணைப் பள்ளியானை அனுதினமும் ஸேவித்து கைங்கர்யம் செய்ய அம்மாதமே தலை சிறந்தது ஆகும். அத்தகு சிறப்புமிக்க மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னாளில் தன் தோழியர்களை எழுப்பி அழைத்துச் சென்று நீராடி, நீள்குழல் முடித்து திலகமிட்டு, பச்சை மாமலை போல் மேனி பவள வாய்க் கமலச் செங்கண்ணனை ஸேவித்துத் திருவருள் பெற்று இன்புறுகின்றனர். இதனை முப்பது பாசுரங்களால், வைகுந்த நாதனுக்கு ஒரு வைர மாலையாக சூடிக்கொடுக்கிறாள் சூடிக்கொடுத்த நாச்சியார்.

முதல் பாசுரம்: மார்கழி நோன்பு நோற்க விரும்புகிறவர்களைப் பொதுவாக அழைக்கிறாள். 'மதி நிறைந்த நன்னாள்' என்று அதற்குரிய காலத்தைக் குறிப்பிடுகிறாள். நந்தகோபனையும், கூர்வேல் கொடுந்தொழிலனான அவரது மனைவியார் 'ஏரார்ந்த கண்ணி யசோதையும், இளஞ்சிங்கம் நாராயணனான கண்ணனையும்' போற்றுகின்றாள்.

இரண்டாம் பாசுரம்: நோன்புக்கு உரிய நியமங்களை-அதாவது செய்வன தவிர்வனவாகிய பிரவ்ருத்தி, நிவ்ருத்தி ரூபமான நியமங்களை விளக்குகிறாள். நெய்-பால் உண்ணுவதில்லை; கண்ணுக்கு மை, கூந்தலுக்கு மலர் முடிப்பதில்லை; ஐயமும் பிச்சையும் இடுவோம்; கோள் சொல்வதில்லை என்று விதிமுறைகளை விளக்குகிறாள்.

மூன்றாம் பாசுரம்: இந்நோன்பினால், நாட்டுக்கு விளையும் பயன்களை குறிப்பிடுகின்றாள். 'உயிரும் உடலும் உன்னத செல்வம் யாவும் கண்ணன்தான்' என்றபேச்சினை மூச்சாக உள்ள திருஆய்ப்பாடி கன்னியர்கள் நோன்பு நோற்க அனுமதி அளித்த நாட்டாருக்கு பெருமழை பெய்து, செந்நெல்லும், ஆவின் பாலும் குவியும், பொங்கிப் பெருக்கெடுக்கும் என்கின்றனர்.

நான்காம் பாசுரம்: வருண பகவானை அழைத்து மழை பெய்ய நியமிக்கின்றாய். உயிராலும் உடலாலும் உணர்வாலும் இத்தகைய பக்தைகளின் கட்டளைகளை கண்ணனே கடுகி வந்து நிறைவேற்றி வைக்கும்போது 'மழை' முதலியவற்றின் அதிதேவதைகள் விரைந்து பணியாற்றுவர் என்கிறாள்.

ஐந்தாம் பாசுரம் நோன்புக்கு இடையூறுகளாக வரும் தொல்லைகள் எல்லாம் பெருமானைத் தொழுது பாடிச் சிந்திக்க அவை கழிந்தொழியும் என்கிறாள்.

ஆறும்பாசுரம் முதல் பதினைந்து பாசுரம் வரை தம்மோடு ஒத்தவர்களை (பகவதநுபவ, ஸஹகாரிகளை) எழுப்புவதாகும்.

ஆறும் பாசுரம்: நோன்பின் சுவடு அறியாத புதியதாய் பகவத் சம்பந்தம் பெற்றிருப்பவளை எழுப்புகிறாள். வெள்ளை விளி சங்கின் பேரரவம் கேட்கிறது; முனிவர்கள் யோகிகள்-'அரிஅரி' என்று ஜபிக்கின்றனர்-என்கிறாள்.

ஏழாம் பாசுரம்: சுவடறிந்தே மறந்து கிடப்பவளை-ஆனைச் சாத்தம் பேரொலியும், தயிர்கடையும் இன்னொலியும் கேட்கவில்லையோ என்றுகூறி எழுப்புகிறாள்.

எட்டாம் பாசுரம்: கண்ணனுக்கு இனியவளை—கீழ் வானம் வெளுக்கவே, எருமைகளும் கொட்டிலிலிருந்து செல்லும் பேரரவம் கேட்கவில்லையோ-என்று வினவி எழுப்புகிறாள்.

ஒன்பதாம் பாசுரம்: ஊமையோ - செவிடோ - அனந்தலோ - பெருந்துயிலாளோ - என்று ஆத்திரத்துடன் எழுப்புகிறாள்.

பத்தாம் பாசுரம்: கிருஷ்ண பக்தியிலே தலைவியாக உள்ளவளை, கும்ப கர்ணனே தோற்று உனக்கே தந்துயிலையும் தந்தானோ - என்று இடித்து எழுப்புகிறாள்.

பதினொன்றும் பாசுரம்: தோழிமார் அனைவரும் உன் முற்றம் வந்தனரே, கண்ணனைப் பெறுவதற்கு நீ தோற்காமல் இருக்க வேண்டுமானால் உடனே எழுந்திருப்பாயாக-என்று கனிவோடு எழுப்புகிறாள்.

பன்னிரண்டாம் பாசுரம்: எருமைப் பால் வழிந்து சேறும் நாட்டின் தலைவன் தங்கையை, என்ன இப்படியொரு பெருந்தூக்கம் என்று இடித்து எழுப்புகிறாள்.

பதின்மூன்றும் பாசுரம்: பிள்ளைகள் எல்லாரும் பாவைக்களம் சென்றனர்; 'வெள்ளியும் எழுந்தது வியாழமும் உறங்கிற்று' இதை அறியாயோ; உன் கள்ளம் தவிர்த்து எழுந்திருப்பாய் - என்று எழுப்புகிறாள்.

பதினான்காம் பாசுரம்: 'எல்லோரையும் நானே வந்து எழுப்புவேன்' என்று கூறியவளைத் துயிலுணர்த்துகிறாள். உங்கள் தோட்டத்து குளத்தில் செங்கழுநீர் மலர்கள் மலர்ந்தன, ஆம்பல் பூக்கள் கூம்பின, நாநலம் மிக்கவளே எழுந்திரு - என்று எழுப்புகிறாள்.

**பதினைந்தாம் பாசுரம் :** 'இளங்கிளியே இன்னமுமா உறக்கம்?' சுருக்'கென்று அழைக்காதே அனைவரும் வந்தனரோ? வரட்டும் - என்றுகூறி உங்கியவளை எழுப்புகிறாள்.

இனி பதினாறும் பாசுரம் முதல் இருபத்திரண்டு பாசுரம் வரை ஸ்ரீ கண்ணபிரானை எழுப்புவதாகும். அனைவரும் நந்தகோபனுடைய திருமாளிகைக்கு வருகின்றனர்.

**பதினாறும் பாசுரம் :** நந்தகோபனுடைய கோயில் காப்பானே, தோரண வாயில் காப்பானே, மணிக் கதவு தாள் திறவாய்; மறுத்து விடாதீர்கள்-என்று வேண்டுகின்றனர்.

**பதினேழாம் பாசுரம்:** அறம் செய்யும் நந்த கோபாலனையும், குலவிளக்கான யசோதையும், பொற் கழலடி பலதேவனையும், உலகளந்த உம்பர் கோமானை கண்ணனையும்-கருணையோடு எழுப்புகிறாள்.

**பதினெட்டாம் பாசுரம் :** 'தேவியின் திருவருள் துணை நின்றால்தான் எதனையும் சாதிக்க இயலும்' என்று நந்தகோபன் மருமகளான நப்பின்னையை-உன் பந்தலில் குயில்களும் கூவுவதால் துயிலெழுந்து வந்து திறப்பாய்-என்று இறைஞ்சுகிறாள்.

**பத்தொன்பதாம் பாசுரம் :** பஞ்ச சயனத்தில் நப்பின்னை திருமார்பில் கண் வளரும் கண்ணனைக் கண் திறந்து பார்க்க, அவனைத் துயிலெழவிடு என்று நப்பின்னையிடம் விண்ணப்பிக்கின்றாள்.

**இருபதாம் பாசுரம் :** தேவர்களின் துன்பத்தைக் களையும் கண்ணனை எழுப்பி, விசிறியும் கண்ணாடியும் தந்து அவனையும் நீராட உடன் அனுப்புக என்று நப்பின்னையிடமே வேண்டுகிறாள்.

**இருபத்தொன்றும் பாசுரம்:** பகைவர்கள் உன் வாசலில் கதியற்று வந்து தொழுவதுபோல நாங்கள் தொழுகிறோம் எழுந்திருப்பாயாக என்று பால் சொரியும் பசுக்களையுடைய செல்வனின் மகனை எழுப்புகிறாள்.

**இருபத்திரண்டாம் பாசுரம்:** அழகிய பூமியை ஆண்ட அரசர்கள் அகங்காரம் அடங்கிக் கட்டிலுக்கு அருகே வந்து நிற்பதைப் போல வந்துள்ள எங்களைக் காண கண் விழித்து எழுந்தருள்க-என்று எழுப்புகிறாள்.

இனி இருபத்து மூன்றும் பாசுரம் முதல் முப்பதாம் பாசுரம் வரை பகவானைப் போற்றி வணங்குவது ஆகும்.

**இருபத்து மூன்றும் பாசுரம்:** உறங்கி எழுந்து வந்து ஆஸ்தான சிங்காசனத்தில் எழுந்தருளி வந்த காரியத்தை ஆராய வேண்டுமென்று பாவையர்கள் பிரார்த்திக்கிறார்கள்.

**இருபத்து நான்காம் பாசுரம்:** பிரார்த்தனைக்கு இணங்க ஆஸ்தானத்தில் எழுந்தருளியதும் பல்லாண்டு இசைக்கின்றனர், கன்னியர்கள்.

**இருபத்தைந்தாம் பாசுரம்:** தாங்கள் யாசித்து வந்ததை விண்ணபித்துக் கொள்கின்றனர். தங்கள் வருத்தமும் தீர வேண்டுகின்றனர்.

**இருபத்தாறும் பாசுரம்:** மேலையார் செய்த நோன்பு அனுஷ்டிக்கத் தேவையான வெண் சங்குகள்-ஒலிக்கும் பறைகள்-பல்லாண்டு இசைப்பார் கோல விளக்கு-கொடி விதானம் ஆகியவை அருள்க என யாசிக்கின்றனர்.

**இருபத்தேழாம் பாசுரம்:** நோன்பு முடித்ததும் நீயும் நப்பின்னையும் சம்மானமாக அளிக்கும் அணி மணி-ஆடை ஆபரணங்களை அணிந்து, நெய்யுடன் கூடிய பால் சோறு உண்டு இன்புறுவோம் என்கின்றனர்.

**இருபத்தெட்டாம் பாசுரம்:** தங்கள் சிறுமையையும், அவன் பெருமையையும் கூறி, அவனோடு உள்ள உறவையும் கூறி, அபராத க்ஷமாபணம்-பிழைகளைப் பொறுத்தருள வேண்டுகின்றனர்.

**இருபத்தொன்பதாம் பாசுரம்:** மற்றைய ஆசா பாசக் காமங்களை உதறித் தள்ளிவிட்டு உனக்கே நாம் ஆட்செய்வோம் என்று தங்களுடைய பரம தாத்பரியத்தை வெளிப்படுத்தி, மனோரதத்தைப் பூரணத்துவம் செய்து கொள்கின்றனர்.

**முப்பதாம் பாசுரம்:** கோபியர் பெற்ற இத் தகைய பகவதநுபவத்தை கோதையும் பெறுகிறாள் ஸ்ரீ கிருஷ்ணனுக்கிரகத்தாலே. முப்பது பாசுரங்களைப் பாடியது அடியேனே-என்று குறிப்பிட்டு இதனை முழு மனதுடன் இசைப்பவர்கள் என்றும் வாழ்வர் இன்புற்று-என்று உரைக்கின்றாள்.

**தேனிசை;** ஸ்ரீ வில்லிப்புத்தூரில், அதிவிடியற் காலையில்-முழுமதி தண்ணொளியில், தன் தோழிகளுடன் ஸ்ரீமந் நாராயணனின் திருநாமத்தைத் தேனிசையாய் இசைக்கச் செய்து ஒலிக்கச் செய்தாள் கோதை.

**வாழ்வர் இன்பமாய் :** ஸ்ரீ கோதையின் கருத்தில் தோன்றிய 'கரு'விற்கு, சாஸ்திரோக்தமாக திரு உருவ வடிவங்கள் அளித்த ஓவியர் 'சசி'க்கும், 'ஸ்ரீ ஆண்டாள் அருளிய திருப்பாவையை' கண்ணுற்றோர்க்கும், கற்றோர்க்கும், கற்றதை செவிமடுத்தோர்க்கும், துன்பங்கள் நீங்கப்பெற்று, திருவேங்கிட மாமலையோனை திருமாலின் திருவருளினால் நலமும் வளமும், சீரும் சிறப்பும் செல்வமும் பெற்று உலகெலாம் போற்ற வாழ்வர்.

திருவேங்கடமுடையான் திருவடிகள் போற்றி! போற்றி!

---

**ஸ்ரீ ஹரி-சென்னை-71.**

---

# இன்றென்னைப் பொருள் ஆக்கி...

உலகப்பற்று ஏதுமின்றி எம்பெருமானின் திருவடிப்பற்றையே பற்றுக்கொண்டு பிறந்தகாலம் முதல் உயிர் இவ்வுடலை விட்டுப்போகும் வரை மண்ணில் நல்லவண்ணம் வாழ வழிகாட்டியருளியவர்கள்தான் அடியார் பெருமக்கள். பரம்பொருளைப் போற்றிப் புகழும் நாட்கள் எல்லாம் மகிழ்ச்சி நிறைந்த நாட்கள் என்றும் இறைவனைத் தொழாத நாட்கள் எல்லாம் துயர் நிறைந்த நாட்கள் என்றும் இன்ப துன்பத்திற்குக் காரணம் காட்டுகின்றனர். 'பெரும்பெற்றப் புலியூரானைப் பேசாத நாளெல்லாம் பிறவாநாளே' என்று அப்பர் பெருமான் இறைவனை ஏத்தும்பணி எவ்வளவு உயர்ந்தது என எடுத்துக்காட்டுகின்றார். 'இமைப்பொழுதும் என் னெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க' என்று திருவாசகம் கூறுவதிலிருந்து இறை சிந்தனையின் சிறப்பை உணரலாம். சிந்தை சொல் செயலால் உணர்ந்து போற்றும் பேற்றினை நம்மாழ்வார் கூறி மகிழ்கின்றார்.

சிந்தைமற் றொன்றின் திறத்ததல் லாத்தன்மை
தேவபி ரான்அறியும்
சிந்தையி னால்செய்வ தானறியாதன
மாயங்கள் ஒன்றுமில்லை
சிந்தையி னால்சொல்லி னால்செய்கை யால்நிலத்
தேவர் குழுவணங்கும்
சிந்தை மகிழ்திரு வாறன் விளையுறை
தீர்த்தனுக் கற்றபின்னே.

இறையருளை அடியவர்கள் மெய்தான் அரும்பி விதிர்விதிர்ந்து அனுபவிக்கின்றனர். அவ்வநுபவம் என்று வரும் என்று எவராலும் சொல்ல இயலாது. 'சும்மா இருக்கும் சுகம்' என்று கருதப்படும் முட்டாத பேரின்பம் இன்றைக்குத்தான் வருமோ, நாளைக்குத்தான் வருமோ என்று திருவருளை நாடுவோர் நாளும் ஏங்கி நிற்பர். அந்த அனுபவம் தொடர்ச்சியாக நீடித்து நிலைத்திருக்கவே விரும்புவர். இறைவன் சோதனையாலோ அல்லது கர்ம வினைப்பயனாலோ அந்த அனுபவம் தடைப்பட்டால் மீண்டும் அதனைப் பெற்று மகிழ முதிற்சி செய்வர். அப்போது தாங்கள் ஏற்கனவே பெற்ற வார்த்தைகளால் எடுத்துக்கூற முடியாத அனுபவங்களை நினைத்து மகிழ்ந்து யாம் பெற்ற இன்பம் பெருக இவ்வையகம் என்ற பெருநோக்கில் உலகோர் உய்யும்பொருட்டு எடுத்தியம்புவர்.

கருவுற்ற நாள் முதலாகவே பரம்பொருளை வணங்கும் கருத்துடையவர்களாதலால் கருவில் திருவுடையவர்கள் என்றும் கருதப்படுகின்றனர்.

ஒன்றும் மறந்தறியேன் ஓதநீர் வண்ணனையான்
இன்று மறப்பனோ ஏழைகாள்? —அன்று
கருஅரங்கத் துட்கிடந்து கைதொழுதேன் கண்டேன்
திருவரங்கம் மேயான் திசை.

என்று பொய்கையாழ்வார் அருளிச் செய்வதிலிருந்து என்றும் எம்பெருமானுக்கு ஆட்பட்டவர்கள் அடியவர்கள் என்பது புலனாகின்றது.

என்றைக்கும் என்னையுய் யக்கொண்டு போகிய
அன்றைக்கன் றென்னைத்தன் னாக்கிய னால்தன்னை
இன்றமிழ் பாடிய ஈசனை யாதியாய்
நின்ற சோதியை என்சொல்லி நிற்பனோ ?

என்று நம்மாழ்வார் திருவாய்மொழி மலர்ந்து அருளுவதிலிருந்து இறைவன் அடியவர்கள் தன்னை இன்றமிழால் பாடவேண்டும் என்ற நோக்கில் ஆட்கொண்டருளுவான் என்பது தெளிவாகிறது. திருமூலர் என்ற அருளாளர்,

என்னை நன்றாகப் படைத்தனன்
தன்னை நன்றாய்த் தமிழ் செய்யுமாறே

என்று புகழ்வதிலிருந்து இக்கருத்து புலப்படுகின்றது.

திருஊரகம் என்ற திருப்பதியில் எம்பெருமான் நின்று அருளினதும் திருப்பாடகம் என்ற திருப்பதியில் வீற்றிருந்ததும், அடியேனுக்கு ஞானம் தோன்றாக் காலமாகிய அன்று திருவெஃகா என்ற திருப்பதியில் பள்ளி கொண்டருளிய செய்கையெல்லாம் யான் பகவானை நாடாத காலத்தில் தான் நடைபெற்றது. அக்காலத்தில் யான் இரண்டாம் பிறப்பாகிய ஞானப் பிறவி பெறவில்லை. ஆனால் ஞானப்பிறவி பெற்றபின் ஒருகணப் பொழுதுகூட மறக்காமல் உள்ளேன். ஆகவே எம்பெருமான் நின்றகோலம், இருந்தகோலம், பள்ளிகொண்ட கோலம் அனைத்தும் எனது உள்ளத்தினுள்ளேயே நடைபெறுகின்றன. இவ்வாறு திருமழிசைப்பிரான் திருச்சந்த விருத்தத்தில் சொல்வதிலிருந்து பாரொடு விண்ணும் பரந்த எம்பெருமான் அர்ச்சாவதாரமாய்த் திருத்தலங்களில் மக்கள் உய்யும் பொருட்டுப் பல்வேறு திருமேனிக் கோலங்களுடன் எழுந்தருளியிருந்தாலும் அடியவர்கள் ஞான நாட்டம் பெற்ற பின்பு அத்திருக்கோலங்கள் அனைத்தும் ஞானிகளின் நெஞ்சங்களில் நீங்கா இடம் பெற்று விடுகின்றன என்பது உண்மையாகிறது.

டாக்டர். ஆர். கோபாலகிருஷ்ணன்,
சென்னை.

# தெரிந்து கொள்ளுங்கள்

## குத்து விளக்குத் திரி

தினமும் சாதாரணமாக விளக்கேற்றும்போது போடும் திரி, பல விஷயங்களை நமக்குக் கூறுகிறது. நமக்குத் தேவையான பிரார்த்தனைக் கேற்பத் திரி போடலாம்.

தாமரைத் தண்டில் திரி போட்டால் மூன்று ஜென்ம பாபம் போகும்.

வாழைத் தண்டு நறுக்கும்போது வரும் நூலைத் திரியாக்கிக் காய வைத்துப் போட்டால் குல தெய்வ குற்றம் சாபம் போகும்.

வெள் எருக்கின் பட்டையில் திரி செய்து போட்டால் துர் தேவதை விலகும்; விநாயகர் அருள் கிட்டும்.

புது மஞ்சள் சேலைத் துண்டில் திரி போட்டால் தாம்பத்ய தகராறு நீங்கும்.

புது வெள்ளை வஸ்திரத்தில் பன்னீரை விட்டு உலரவிட்டுப் போடலாம். எல்லாப் பலனும் கொடுக்கும்.

## தீப முகமும் திசையும்

குத்து விளக்கின் தீபம் கிழக்கு முகமாக ஏற்றினால் துன்பங்கள் நீங்கி வசீகரம் உண்டாகும்.

மேற்கு முகமாக ஏற்றினால் கிரகதோஷம் பங்காளிகள் பகை போகும்.

வடக்கு முகமாக ஏற்றினால் திரண்ட செல்வம் கல்வித் தடை சுபகாரியத்தடை போகும்.

தெற்கு முகமாக ஏற்றுவது மிகவும் பாபம்; எமனுக்கு ப்ரீதி; துஷ்ட தேவதை ஓடி வரும்.

ஒரு முகம் ஏற்றினால் மத்திய பலன்; இருமுகம் ஏற்றினால் குடும்ப ஒற்றுமை; மும்முகம் ஏற்றினால் புத்திர சுகம், கல்வி, கேள்விகளில் விருத்தி; நான்குமுகம் ஏற்றினால் பசு பால் பூமி; ஐந்துமுகம் ஏற்றினால் சர்வபீடை நிவர்த்தி ஐஸ்வர்ய லட்சுமி கடாட்சம் ஆகியன பெருகும் என்று சுகர் உபதேசிக்கிறார்.

# நவக்கிரகங்களுக்கு ஒரு கோவில்

பெரும்பாலான கோவில்களில் நவக்கிரகங்களை, ஒரே இடத்தில், ஒட்டு மொத்தமாக பீடத்தில் வைத்திருப்பதை நாம் பார்த்திருக்கிறோம். ஆனால் ஒவ்வொரு கிரகத்தையும் தனித்தனியே சந்நிதியில் வைத்து நவக்கிரகங்களுக்கென்றே ஒரு தனிக்கோவில் கும்பகோணத்திற்கருகே உள்ளது. பெயர் : சூரியனார்க் கோவில். மூலஸ்தானத்தில் இருப்பவர் சூரிய பகவான்.

— திருமதி கமலா மாரியப்பன் — கோயம்புத்தூர்.

எத்தனை காலமும் எத்தனையூழியும்
இன்றொடு நாளையென்றே
இத்தனை காலமும் போய்க்கிறிப்பட்டேன்
இனியுன்னைப் போகலொட்டேன்
மைத்துனன் மார்களை வாழ்வித்து
மாற்றலர்
நூற்றுவ ரைக்கெடுத்தாய்
சித்தம்நின் பாலதறிதி யன்றேதிரு
மாலிருஞ் சோலையெந்தாய்!

எனப் பெரியாழ்வார் விளிப்பதிலிருந்து ஆட்படாத நாட்களுக்கு முற்பட்டகாலமெல்லாம் வீணேக்கழிந்தது. எனினும் இறையருள் கிட்டி ஞானம் பெற்றபின் அதனை விட்டு விடாமல் இடையறு இன்ப அன்பி திளைக்க வேண்டும் என்பதே அருளாளர்களின் விருப்பம்.

'குன்றென நின்று நீ என்னை ஆட் கொண்ட அக்காலத்தே எனது உயிர் உடல் உடமை அனைத்துப் பொருட்களையும் ஏற்றுக் கொண்டுவிட்டாய். இன்று எனக்கு ஏதேனும் இடையூறு தான் உண்டோ? நீ எனக்கு நன்மையைச் செய்தாலும் தீமையைச் செய்தாலும் அதை ஆராய நான் தகுதியில்லாதவன். அதாவது 'என் உடல் பொருள், ஆவி அனைத்தும் உன் வசமாகி விட்டன. எனவே உடைமைக்கு ஏற்படும் நன்மை தீமைகள் யாவும் உடையவனையே சேருமல்லாது உடைமையைச் சேரா' என்ற கருத்தில் மாணிக்கவாசகர் அருளிச் செய்கின்றார்.

நம்மாழ்வார் இக்கருத்துக்குச்சற்று மாறுபட்டு "பொருளற்ற எம்மையும் ஓர் பொருளாக்கித் தன்னையே எனதுள்ளத்தில் எழுந்தருளச்செய்து பேன்றின்பம் கொடுத்தான். அருள் நோக்கில் யான் படும் காலத்திற்கு முற்பட்டபொழுதில் என்னைத் தன்னுள் வையாது எக்காரணத்தால் வெளியில் இருக்கச் செய்தான்?" என்று பொருள்படஎம்பெருமானுக்கு விண்ணப்பம் சமர்ப்பிக்கின்றார்.

இன்றென்னைப் பொருளாக்கித்
தன்னையென்னுள் வைத்தான்
அன்றென்னைப் புறம்போகப்
புணர்த்ததென் செய்வான்?
குன்றென்னத் திகழ்மாடங்கள்
சூழ்திருப்பேரான்
ஒன்றெனக் கருள்செய்ய
உணர்த்தலுற்றேனே.

# ஸ்ரீ வேங்கடேச ஸுப்ரபாதம்

धाटीषु ते विहगराजमृगाधिराज-
नागाधिराजगजराजहयाधिराजाः ।
स्वस्वाधिकारमहिमाधिकमर्थयन्ते
श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥

தாடீஷு தே விஹகராஜ ம்ருகாதிராஜ
நாகாதிராஜ கஜராஜ ஹயாதிராஜா: |
ஸ்வஸ்வாதிகார மஹிமாதிக மர்த்தயந்தே
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை :— *ஸ்ரீ வேங்கடாசலபதே = திருமலை நாதனே! விஹகராஜ ம்ருகாதிராஜ நாகாதிராஜ கஜராஜ ஹயாதிராஜா: = கருடன் சிஹ்மம் (சிங்கம்) ஆதிசேஷன் ஐராவதம் உச்சைஸ்ரவஸ் என்ற இவர்கள், தே = உன்னுடைய; தாடீஷு = நடைகளில்; ஸ்வ ஸ்வ அதிகார மஹிம அதிகம் = தம்தம் தகுதிக்கேற்ற பெருமையினும் அதிக பாகத்தை; அர்த்தயந்தே = கோருகின்றனர்; தவ ஸுப்ரபாதம் = உனக்கு நற்பொழுது புலருக.*

கருத்துரை :— *திருவேங்கட நாதனே! நீ வெளியில் எழுந்தருளும்பொழுது கருடகதி, ஸிஹ்ம கதி, ஸர்ப்பகதி, கஜகதி, அச்வகதி என்று சிறப்பித்துக் கூறப்படும் உன் அழகிய நடைகளின் மேன்மையைக்கண்டு, கருடன் முதலானோர் ஐவரும், தற்பொழுது அவ்வகை நடை நடத்தலிலுள்ள தகுதியினும் அதிகமான தகுதியைப்பெற விரும்பி உன் திருக்கோயில் வாயிலில் காத்திருக்கின்றனர். நீ துயிலெழுந்து அவர்கள் விருப்பத்தை நிறைவேற்றியருள வேண்டும்.*

குறிப்பு :— *விஹக ராஜன்-பக்ஷிகள் தலைவன். ம்ருக அதிராஜன்-விலங்குகளுக்கு அரசன். இவ்வாறே மற்றவை.*

குறிப்பு :— *தாடீஷு என்ற பதத்திற்கு யுக்த யாத்திரை என்ற (முதலில் தோன்றக்கூடிய) அர்த்தத்தைக் கூறிக் கருடன் முதலியவர்கள் நீ செய்யும் யுத்தயாத்திரையில் தங்களுக்கு அதிகப்பங்கு வேண்டுமென்று கோருகின்றனர்' என்று பலர் இச்சுலோகத்திற்குப் பொருள் கூறுகின்றனர்.*

सूर्येन्दुभौमबुधवाक्पतिकाव्यसौरि-
स्वर्भानुकेतुदिविषत्परिषत्प्रधानाः ।
त्वद्दासदासचरमावधिदासदासाः
श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥

ஸூர்யேந்து பௌம புத வாக்பதிகாவ்ய ஸௌரி
ஸ்வர்பாநு கேது திவிஷத்பரிஷத்ப்ரதாநா: |
த்வத் தாஸ தாஸ சரமாவதி தாஸ தாஸா:
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை :— *ஸூர்ய = சூரியன்; இந்து = சந்திரன்; பௌம = அங்காரகன்; புத = புதன்; வாக்பதி = குரு; காவ்ய = சுக்கிரன்; ஸௌரி = சனி; ஸ்வர்பாநு = இராகு; கேது = கேது (என்ற); திவிஷத் பரிஷத் ப்ரதாநா: = தேவ ஸபையிலுள்ள முக்கியர்கள் (நவக்ரஹங்கள்); த்வத் = உன்னுடைய; தாஸ = அடியார்களின்; தாஸ = அடியார்களுக்கு; சரம அவதி தாஸ = (அடிமையின்) கடை எல்லையை அடைந்துள்ள அடியார்களுக்கும்; தாஸா: = அடியார்களாய்; ஸந்தி = இருக்கின்றனர். (உன் கோயில் வாயிலில் நிற்கின்றனர்.) ஸ்ரீ வேங்கடாசலபதே = திருவேங்கட நாதனே; தவ ஸுப்ரபாதம் = உனக்கு நற்பொழுது புலருக.*

கருத்துரை :— தேவர்களிடத்தும் தங்கள் வன்மையைக் காண்பிக்கவல்ல நவக்ரஹங்கள் உன் அடியார் திறத்தில் அவ்வாறிராததோடு அவர்களுக்குத் தொண்டும் செய்து அவ்வாயிலாய் உன் திருவருளைப் பெற விரும்பிவந்து காத்துநிற்கின்றனர். நீ துயிலெழுந்து அவர்களுக்கு அருளுக.

குறிப்பு :— *ஸௌரி — 'ஸ' என்னுமெழுத்தை சிவன், அரிசி இப்பதங்களிலுள்ள 'ச' காரத்தைப் போல் உச்சரிக்கவும்.*

त्वत्पादधूलिभरितस्फुरितोत्तमाङ्गाः
स्वर्गापवर्गनिरपेक्षनिजान्तरङ्गाः ।
कल्पागमाकलनयाऽऽकुलतां लभन्ते
श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥

த்வத் பாத தூளி பரித ஸ்புரிதோத்தமாங்கா:
ஸ்வர்காபவர்க நிரபேக்ஷ நிஜாந்தரங்கா: |
கல்பாகமாகலநயாऽऽகுலதாம் லபந்தே
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை :— ஸூர்ய.........ப்ரதாநா: = சூரியன் முதலிய நவக்ரஹங்கள்; த்வத் = உன்னுடைய; பாத தூளி = திருவடித் தூள்களால்; பரித ஸ்புரித உத்தம அங்கா: = நிறைந்து விளங்குகின்ற தலைகளை உடையவர்களாகவும்; ஸ்வர்க அபவர்க நிரபேக்ஷ நிஜ அந்தர் அங்கா: = சுவர்க்கத்திலும் மோக்ஷத்திலும் விருப்பில்லாத தங்கள் மனத்தை உடையவர்களாகவும்; (இருந்துகொண்டு) கல்ப = (வேறு) கல்பங்கள்; ஆகம = வந்துவிடப் போகின்றனவே யென்ற; ஆகலநயா = எண்ணத்தால்; ஆகுலதாம் = மனக்கலக்கத்தை; லபந்தே = அடைகின்றனர்; ஸ்ரீ வேங்கடாசலபதே = திருவேங்கட நாதனே; தவ ஸுப்ரபாதம் = உனக்கு நற்பொழுது புலருக.

கருத்துரை :— சூரியன் முதலிய நவக்ரஹங்கள் அதிகார புருஷர்கள். இப்பொழுதே மோக்ஷம் அடையவேண்டு மென்றிருந்தாலும் பொறுப்பை விட்டு விட்டுப்போக இயலாதவர்கள். அத்தகைய அவர்கள் இங்கு வந்து உன் அடியார்களுக்குத் தொண்டு செய்து அவ்வாயிலாய் உன் அருளைப் பெற்று உன் திருவடித் தூள்களைத் தங்கள் தலைகளில் பெய்துகொண்டு அவ்வானந்தத்தில் சுவர்க்கமும் வேண்டாம் மோக்ஷமும் வேண்டாம் என்று கூறி நிற்கின்றனர். வேறு கல்பங்கள் வந்துவிட்டால் தாங்கள் இவ்வாறு இங்கிருந்து களிக்க இயலாது போமேயென்று வருந்தவும் வருந்துகின்றனர். நீ துயிலெழுந்து அவர்களுக்கு அருளுக.

குறிப்பு :— கல்பங்கள் வேறுபடின் நவக்ரஹங்களும் வேறுபடும்.

त्वद्गोपुराग्रशिखराणि निरीक्षमाणाः
स्वर्गापवर्गपदवीं परमां श्रयन्तः ।
मर्त्या मनुष्यभुवने मतिमाश्रयन्ते
श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥

த்வத்கோபுராக்ரசிகராணி நிரீக்ஷமாணு:
ஸ்வர்காபவர்க பதவீம் பரமாம் ச்ரயந்த: |
மர்த்யா மநுஷ்யபுவநே மதிமாச்ரயந்தே
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை :— பரமாம் = கடைக்கோடியான; ஸ்வர்க அபவர்க பதவீம் = சுவர்க்கம் மோக்ஷம் (இவைகளின்) வழியை; ச்ரயந்த: = அடைந்து(ள்ள); மர்த்யா: = நிலவுலகத்தவர்; த்வத் கோபுர அக்ர சிகராணி = உன்னுடைய கோபுரத்தின் முனையிலுள்ள முடிகளை (கலசங்களை); நிரீக்ஷமாணு: = பார்த்தவர்களாய்; மநுஷ்ய புவநே = மனுஷ்ய லோகத்தில்; மதிம் = எண்ணத்தை; ஆச்ரயந்தே = பற்று(வைக்)கின்றனர். ஸ்ரீ வேங்கடாசலபதே = திருவேங்கடநாதனே; தவ ஸுப்ரபாதம் = உனக்கு நற்பொழுது புலருக.

கருத்துரை :— யஜ்ஞ யாகாதிகள் செய்து சுவர்க்கத்திற்குச் செல்லும் மனிதர்களும், இவ்வுலகத்தை வெறுத்து பக்தி ப்ரபத்திகளில் ஒன்றைச் செய்து மோக்ஷம் செல்லும் மனிதர்களும், தாங்கள் செல்லும் வழியின் கோடியை அடைந்து பாக்ய விசேஷத்தால் உன் கோபுரங்களைத் தற்செயலாய்த் திரும்பிப்பார்க்க நேருமாயின் பாடுபட்டுச் சம்பாதித்த அவ்வுலகங்களைவிட்டு உன் ஸேவைக்காக மனுஷ்ய உலகத்திற்கே திரும்பிவர முடிவு செய்கின்றனர். ஸ்ரீனிவாஸ! நீ துயிலெழுந்து அவ்வாறு திரும்பி வந்தவரை அருளுக.

குறிப்பு :— மேலுலகத்தில் சென்று உத்தம பதங்களை அடைந்தவரும் உன்னை ஸேவிக்க விரும்பி மனுஷ்ய லோகத்திற்கு மறுபடியும் வந்து விடுகின்றனர் என்றும் பலர் பொருள் கூறுகின்றனர்.

श्रीभूमिनायक दयादिगुणामृताब्धे
देवाधिदेव जगदेकशरण्यमूर्ते
श्रीमन्ननन्तगरुडादिभिरर्चिताङ्घ्रे
श्रीवेङ्कटाचलपते तव सुप्रभातम् ॥

ஸ்ரீ பூமிநாயக தயாதிகுணம்ருதாப்தே
தேவாதிதேவ ஜகதேக சரண்ய மூர்த்தே |
ஸ்ரீமந் நநந்த கருடாதிபிரர்ச்சிதாங்க்ரே
ஸ்ரீ வேங்கடாசலபதே தவ ஸுப்ரபாதம் ||

பதவுரை :— ஸ்ரீ பூமி நாயக = திருமகளுக்கும் நிலமகளுக்கும் கணவனே! தயா ஆதி குண அம்ருத அப்தே = அருள் முதலிய குணங்களாகிய அம்ருதத்திற்குக் கடலாயுள்ளவனே! தேவ அதி தேவ = தேவ தேவனே; ஜகத் ஏக சரண்ய மூர்த்தே = உலகங்களுக்கெல்லாம் ஒரு புகலான திருவுருவத்தை உடையவனே! ஸ்ரீமந்=ஸ்ரீமானே; அநந்த கருட ஆதிபி: = ஆதிசேஷன் கருடன் முதலியவர்களால்; அர்ச்சித அங்க்ரே = தொழப்பட்டத் திருவடிகளை உடையவனே; ஸ்ரீ வேங்கடாசலபதே = திருமலை நாதனே; தவ ஸுப்ர பாதம் = உனக்கு நற்பொழுது புலருக.

கருத்துரை :— அனந்தன் கருடன் முதலிய நித்யஸூரிகள் உன் அருளை நோக்கிக் கோயில்வாயிலில் நின்றுகொண்டிருக்கின்றனர். அருட்கடலாகிய நீ உன் மஹிஷிகளுடன் எழுந்துவந்து அருள் புரிய வேண்டும்.

(தொடரும்)

# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்யாயம் — 18.

பகுதி — 20.

பக்த்யா மாமபிஜானதி
யாவான் யஸ்சாஸ்மி தத்வத: |
ததோ மாம் தத்வதோ ஞாத்வா
விசதே ததனந்தரம் ‖ (18-55)

'நான் எத்தன்மையன், யார் என்று பக்தியினால் ஒருவன் என்னை உள்ள படி அறிகிறான்; உள்ளபடி அறிந்த பின் விரைவில் என்னை அடைகிறான்.'

தெருவில் போய்க் கொண்டிருக் கிறோம். எதிரில் யாரோ ஒருவர் நமக்கெதிரே வந்து கொண்டிருக் கிறார். ஒரு வினாடி நேரம் நம் கண் களும் அவரது கண்களும் சந்திக்கின் றன. அவருக்கு நாம் யாரென்று தெரியாது. நமக்கும் அவரை யாரென்று தெரியாது. இருப்பினும் இனம் தெரியாத ஒரு கவர்ச்சி. அவ ரைப் பார்த்து நாம் புன்முறுவல் செய்கிறோம். நம்மைப் பார்த்து அவரும் புன்முறுவல் செய்கிறார். பிறகு சில வினாடிகள் மௌனம். அந்த மௌனத்தில் இருவரது மன மும் ஒன்றோடொன்று பேசிக் கொள் கின்றன. பிறகு 'நீங்கள்......' என்று அவரை இன்னார் என்று விசாரித்துத் தெரிந்து கொள்கிறோம். உடனே ஒரு மட்டற்ற மகிழ்ச்சி. 'நீங்களா...' என்று அவரை அன்புடன் அர வணைத்துக் கொள்கிறோம். இருவர் கண்களிலும் ஆனந்த பாஷ்யம் பனிக் கின்றது. காரணம் இருவரும் பழைய நண்பர்கள்! பல காலம் பார்க் காதிருந்த காரணத்தால் ஒருவரை ஒருவர் மறந்துவிட்டனர். அவ்வளவு தான். இப்பொழுது அன்பால், நட் பால் இருவரும் ஒன்றி விடுகின்றனர். இது நம்மவரது வாழ்வில் எப்பொழு தாவது நிகழ்வது உண்டு.

அன்பினால் ஆகாதது ஒன்றில்லை. அன்பு உலகில் ஒரு மாபெரும் சக்தி. அன்பு உலகில் செயற்கரிய சாதனை களைச் செய்கிறது. புலி, பாம்பு, சிங் கம் போன்ற கொடூர குணம் வாய்ந் தவை கூட அன்பிற்குக் கட்டுப்படு கின்றன. இந்த அன்பு சமய உலகில் பக்தி என்று அழைக்கப்படுகிறது. பகவான் பக்தனின் பக்திக்குக் கட்டுப் படுகிறான். பக்தனிடம் பக்தி அதி கரிக்கின்ற அளவு, பகவானிடம் 'அனன்ய பக்தி'கொண்டுள்ள பக்தன், எங்கும் எதிலும் பகவானையே காண் கிறான். அவன் பகவான் மயமாகி விடு கின்றான்.

ஸர்வகர்மாண்யபி ஸதா
குர்வாணோ மத்வ்யபாச்ரய: |
மத்ப்ர ஸாதாதவாப் னோதி
சாச்வதம் பதமவ்யயம் ‖ (18-56)

'எப்பொழுதும் எல்லாக் கர்மங் களையும் செய்த போதிலும் என்னைச் சரணடைகிறவன் எனதருளால் சாசு வதமானதும் அழியாததுமாகிய பதத்தை அடைகிறான்.'

முடிந்த நிலையில் பக்தியும் ஞான மும் ஒன்று என்று முந்தைய சுலோகத் தில் தெரிவிக்கப்பட்டது. இந்த சுலோ கத்தில் இறுதி நிலையில் கர்மமும் ஞானமும் ஒன்று என்று தெரிவிக்கப் படுகிறது. கீதை திரும்பத் திரும்ப எடுத்துக் கூறும் ஒரு கருத்து என்ன வெனில் வாழ்வின் இலட்சியத்தை அடைவதற்காக ஒருவன் தனது கடமைகளை விட வேண்டியதில்லை என்பதே யாகும். எங்கிருப்பினும், எந்தப் பணியில் ஈடுபட்டிருப்பினும் ஒருவன் யோகியாக விளங்க முடியும் என்பதுதான் கீதையின் மையக் கருத்து. சத்வ குணத்தில் நிலைத்திருப் பவன் தனது கடமைகளை அதாவது கர்மத்தை விட்டு விடுவதில்லை. மாறாக ஒன்றை அவன் விட்டு விடு கிறான்? எதைத் தெரியுமா? 'தான் செய்யும் கர்மங்களுக்குத் தானே கர்த்தா' என்ற எண்ணத்தை அவன் விட்டு விடுகிறான். அவன் மூலம் செயல் நிகழ்கிறது. ஆனால் கர்த் ருத்வ பாவனை அதாவது 'நான் செய் கிறேன்' என்ற எண்ணம் இல்லை. அதனால் செய்த செயல்களின் விளைவு கள் அவனைப் பாதிப்பதில்லை. செய லும் மிகத் திறம்பட நிகழ்கிறது.

பேராசிரியர் டி. கே. நாராயணன்
MSc., M.Phil.,
ஆசிரியர் 'சமயஜோதி' மதுரை.

ஒரு காரியத்தைச் செய்கையில் அதை 'நாம் செய்கிறோம்' என்ற எண் ணத்துடன் நாம் செய்வோமாகில் விரைவில் நமக்குக் களைப்பு மேலிடு கிறது. செயல் திறன் குன்றுகிறது. மாறாக 'நாம் செய்கிறோம்' என்ற எண்ணம் சிறிதுமில்லாமல் செய்யும் செயலுடன் ஒன்றிவிட்டால், செய லின் களைப்பும் தோன்றுவதில்லை. பன்மடங்கு திறமையுடன் செயல் நிகழ்கிறது. இது நம்மவரது அன்றாட அனுபவம். பகவான் நினைவில் செயல் செய்யும் பக்தன் முழுக்க பகவான் மயமாகி விடுகிறான். தன் கடமை களை ஒழுங்காக இவ்வுலகில் ஆற்றும் அதே வேளையில் அவன் வாழ்வின் இறுதி இலட்சியத்தையும் அடைந்த வனாகிறான். 'இமய ஜோதி' ஸ்ரீசுவாமி சிவானந்தர், பகவான் ஸ்ரீரமணர் போன்ற மகான்கள் உலகில் வாழ்ந்து கொண்டே, தங்கள் கடமைகளைச்

செவ்வனே ஆற்றிக் கொண்டே, நம்மையெல்லாம்விடப் பன்மடங்கு அதிகமாகச் செயல்களைச் செய்து கொண்டே ஜீவன் முக்தர்களாக விளங்கினர். இங்கே கர்மமும் ஞானமும் ஒன்றி விடுகின்றன.

எனவே நாம் உலகில் எப்படி வாழ வேண்டும்? அடுத்த சுலோகத்தில் பதில் வருகிறது.

சேதஸா ஸர்வகர்மாணி
மயி ஸன்யஸ்ய மத்பர: |
புத்தி யோக முபாச்ரித்ய
மச்சித்த: ஸததம் பவ || (18-57)

'விவேகத்தால் கர்மங்களையெல்லாம் என்பால் ஒப்படைத்து என்னையே இலட்சியமாகக் கொண்டு, புத்தி யோகத்தைச் சார்ந்திருந்து, எப்பொழுதும் சித்தத்தை என்பால் வைப்பாயாக!'

அரசாங்கத்தில் பலர் பல்வேறு பதவிகளை வகிக்கின்றனர். ஒவ்வொரு பதவிக்கும் ஏற்ப பொறுப்பு மாறுபடுகிறது. அதிகாரமும் வேறுபடுகிறது. கலெக்டராக பணிபுரிபவரின் அதிகாரம் அவரது மாவட்டம் முழுமையும் செல்லுபடியாகும். பிரதம மந்திரியாகப் பணிபுரிபவரது அதிகாரம் தேசம் முழுமையிலும் செல்லுபடியாகும். ஆனால் இந்த அதிகாரம் எதுவரையில்? அவர் கலெக்டர் அல்லது பிரதமர் பதவியில் உள்ளது வரையில்தான். பதவி போய்விட்டால் கூடவே அதிகாரமும் அவரை விட்டு அகன்று விடுகிறது. மக்களின் பிரதிநிதியாகச் செயல்படும் ஒருவன், தான் அதிகாரம் செலுத்துவதற்கிடையில் 'ஒன்றும் என்னுடையதில்லை. நான் ஒரு தர்மகர்த்தா மாத்திரமே' என்று கருதுவானாகில் அவன் விவேகியாவான். மாறாக எல்லாம் என்னுடையது என்று தவறாகச் செயல்படுவானேயாகில் அவனை அவிவேகி என்றுதான் கருத வேண்டும்.

இதே நிலையில்தான் 'நான்' 'எனது' என்று எதை நாம் கூறுகிறோமோ அதைப் பற்றி நாம் கொஞ்சம் ஆழ்ந்து சிந்தித்தால் இந்த வார்த்தைகளுக்கு அர்த்தம் எதுவுமேயில்லை என்பதைக் கண்டு கொள்வோம். எல்லாம் இறைவனுடையது, ஒன்றும் நம்முடையதல்ல என்பதுதான் விவேகம். இதுதான் புத்தியோகமாகும். நாமெல்லோரும் இறைவனின் கருவிகள். நாமெல்லோரும், இந்தப் பிரபஞ்சம் அனைத்தும் இல்லாத போனாலும், ஒரு நஷ்டமும் ஏற்பட்டு விடாது. இறைவனின் செயல் ஒழுங்காக நிகழும். ஈசுவரன் செயலை ஈசுவரனுக்காகச் செய்வதுதான் உண்மையான சந்நியாசமாகிறது. 'அவனருளாலே அவன்தாள் வணங்குவது' என்பதும் அதுதான். இத்தகைய வாழ்வே பொருள் உள்ள வாழ்வாகும், மற்றது அனைத்தும் மருள் நிறைந்த வாழ்வாகும்.

(தொடரும்)

## நல்ல காலத்திற்கு ஒரு செய்யுள்

திரு. ச. ல. சீநிவாசன் — சத்யமங்கலம்.

**நாம்,** நல்ல காரியம் செய்யும்போது இராகு காலம், எமகண்டம் முதலியவற்றைப் பார்த்தே செய்கிறோம். அதற்காக பஞ்சாங்கத்தையோ, நாட்காட்டியையோ பார்க்கிறோம். அதைத் தவிர்க்கும் பொருட்டுக் கீழே உள்ள செய்யுளை நினைவில் வைத்துக்கொண்டால் எளிதில் அறியலாம். ஒவ்வொரு வார்த்தையின் தொடக்க எழுத்துக்கள் கிழமையைக் குறிக்கும்.

இராகு காலப் பாடல் :

திருமால் சன்னிதியில் வெண்கதிர் புகுத்தி
விளையாடச் செய்வது ஞாயிறு?

"திருமால்" என்பதின் முதல் எழுத்து 'தி' — திங்கட்கிழமை 7½ மணி முதல் 9 மணி வரை. 'சன்னிதி' என்ற சொல்லின் முதல் எழுத்து 'ச' — சனிக்கிழமை 9 மணி முதல் 10½ மணி வரை. இப்படியே ஏனையவற்றிற்கும் பொருள் கொள்ள வேண்டும். ஆரம்பத்தில் 7½ முதல் 1½ மணி வீதம் கூட்டிக்கொண்டே வரவேண்டும்.

எமகண்டப் பாடல் :

விதி புகுந்து செயலாக்கும் திறமை
ஞாலத்தின் சனங்களுக்கு வெளிப்படை

'விதி' என்ற முதல் சொல்லின் முதல் எழுத்து 'வி' — வியாழக்கிழமையைக் குறிக்கும். காலை 6 மணி முதல் 7½ வரை எமகண்டம். 'புகுந்து' — என்ற சொல்லின் முதல் எழுத்து 'பு' — புதன்கிழமை. 7½ முதல் 9 மணி வரை.

வாரசூலப் பாடல் :

ஒவ்வொரு நாளும் சூலத்தின் திசையறிந்து பிரயாணத்தை தவிர்த்து நலமடைவதற்கு ஒரு செய்யுள்.

வெள்ளியோடு ஞாயிறதும் மேற்கில் சனி திங்கள்
நல்ல கிழக்கினையும் நாடாதீர்—எல்லாம் பாழ்
செவ்வாய் புதன் வடக்கும், சேர் வியாழன் தெற்கும்
இவ்வாறே சூலமென்றெண்.

# வால்மீகி திருவுள்ள விளக்கு

ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின் மொழிபெயர்ப்பு

**ச்லோகம் 20 :**

இத்தம் ஸ்ரீவாதிபீக்ருத் குருவர குலஜ: க்ருஷ்ண-ஸூர்யாத்மஜந்மா, காஞ்சீவாஸீ ஸுதீ: ஸ்ரீஹயமுக சரணாஸேவ்யநந்தார்ய நாமா | வால்மீகேர் பாவதீபம் ரகுவர சரணாம் போருஹ ஸ்நேஹதீப்தம், ஸ்வாந்த த்வாந்தௌக வித்வம்ஸநமசல மிஹா ரோபயாமாஸதீப்ரம் ||

**பதவுரை :**

இத்தம்=இவ்வாறாக, ஸ்ரீவாதிபீக்ருத் குருவரகுலஜ:=ஸ்ரீப்ரதிவாதி பயங்கரம் அண்ணாவென்னும் ஆசிரியர் பெருமானது வம்சத்தில் தோன்றியவனும், க்ருஷ்ணஸூரி ஆத்மஜந்மா = க்ருஷ்ணமாசார்ய ஸ்வாமியின் குமாரனும், காஞ்சீவாஸீ= ஸ்ரீகாஞ்சீ எனப்படும் பெருமாள் கோவிலில் வசிப்பவனும், ஸ்ரீஹயமுக சரண ஆஸேவீ=ஸ்ரீஹயக்ரீவருடைய திருவடிகளை எப்போதும் வணங்குமவனுமான, அநந்தார்ய நாமா ஸுதீ: = அனந்தாசார்யனென்று பெயர் பெற்ற புலவன், ரகுவர சரணாம் போருஹ ஸ்நேஹ தீப்தம்=இராமபிரானுடைய திருவடித் தாமரைகளில் ஏற்பட்ட ஸ்நேஹமாகிய (பக்தியாகிய) நெய்யினால் எரியுமதும், ஸ்வாந்த த்வாந்த ஓக வித்வம்ஸநம்=மனதிலுள்ள இருளின் திரளை மாய்க்கவல்லதும், அசலம்=அணையாததும், தீப்ரம்=மிகவும் பிரகாசிக்குமதுமாகிய, வால்மீகே: பாவ தீபம்=(வால்மீகி முனிவரின் திருவுள்ளக் கருத்துக்களை விளக்கும் நூலாகிய) வால்மீகி திருவுள்ள விளக்கு என்ற விளக்கை, இஹ=இவ்வுலகில், ஆரோபயாமாஸ=ஏற்றி வைத்தான்.

**விசேடவுரை :**

ஸ்ரீவத்ஸவம்சமென்னும் திருப்பாற்கடலில் கௌஸ்துபமணி போல் தோன்றியவரும், ஸ்ரீஹஸ்திகிரி நாதனாகிய பேரருளாளப் பெருமாளது மற்றோரவதாரமானவரும், ஸ்ரீ பகவத் ராமாநுஜ முனிவரால் ஸ்தாபிக்கப் பட்ட எழுபத்து நான்கு ஸிம்ஹாஸ நாதிபதிகளில் ஒருவரான முடும்பை நம்பி என்னும் (தமிழ்த்) திருநாமமுடைய ஸ்ரீராமாநுஜ பூர்ணருடைய திருவம்சத்தில் உதித்தவரும், அம் முடும்பை நம்பிக்குப் பத்தாம் தலை முறையானவரும், பிள்ளை லோகாசார்யரின் சிற்றப்பருடைய பௌத்திரரின் பௌத்திரரும், (பௌத்திரரின் பௌத்திரராவது - பிள்ளை வயிற்றுப் பேரரின் பிள்ளை வயிற்றுப் பேரர்.) தர்க்க சாத்திரத்தில் கற்றுத் துறை போகிய புலவர் கோஷ்டியினரால் சூடாமணி போல் சிரஸில் வைத்துக் கொண்டாடப்படும் ஸ்ரீ குமார வேதாந்தாசார்ய ஸ்வாமியினிடம் அறக்கற்று சாரீரக சாஸ்திரத்தினுடைய (ப்ரஹ்ம ஸூத்ரம் அதன் வ்யாக்யான க்ரந்தங்கள் ஆகிய ஸம்ஸ்க்ருத வேதாந்த சாஸ்திரத்தினுடைய) உண்மைப் பொருளை யுணர்ந்தவரும், இளமைப் பருவத்திலேயே மாயாவாதிகளான சங்கராத்வைத மதத்தினரை வென்றபோது 'ப்ரதிவாதி பயங்கரர்' (=எதிர்வாதம் செய்வோர்க்கு அச்சத்தை விளைப்பவர்) என்ற பட்டத்தை அவ்வாசிரியர் தம்மாலேயே வழங்கப் பெற்றவரும், ஸ்ரீமத் வரவர முனியெனப் படும் மணவாள மாமுனிகள் நிறுவியருளிய அஷ்டதிக்கஜங்கள் என்று பிரசித்தரான ஆசார்யர்கள் எண்மருள் சிறந்தவராய், அம்மாமுனிகளாலேயே ஸ்ரீ பாஷ்ய ஸிம்ஹாஸனத்தில் பட்டாபிஷேகம் செய்யப் பெற்றவரும், அம்முனிவர் பெருமானது திருவடித் தாமரைகளிடத்தில் செய்த தொண்டின் பயனாகப் பெற்ற ஸகல வேதாந்தார்த்தங்களின் அறிவையுடையவருமான ஹஸ்திகிரி நாதரண்ணா என்னும் ஆசார்யர்—இங்கு 'ஸ்ரீவாதிபீக்ருத் குரு:' எனப் படுகிறார். அவருடையதான—உலகம் மதிக்கும் குலத்தில் உதித்தவர்—இந் நூலாசிரியர்.

'காஞ்சீவாஸீ'—காஞ்சீ = பிரமன் ஹரியைப் பூசித்த நகரம். 'க: என்பது பிரமதேவனின் பெயர், அவரால் அந்நகரில் ஹரியான பேரருளாளப் பெருமாள் அவதரிப்பித்து ஆராதிக்கப்பட்டார், அதனால்-புண்ணியங்களை

---

தமிழாக்கம் :

திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியார்,

சிரோமணி வித்வான்

திருப்பதி.

---

ஒன்று நூறாக வளர்த்திடும் அந்நகரம் காஞ்சீ என்று பிரசித்தி பெறலாயிற்று' (காஞ்சீ மாஹாத்ம்யம்) என்று - (க - அஞ்ச் என்று) பதம் பிரித்துப் பொருளுணர்த்தப் பெற்ற 'காஞ்சீ' என்றதனைத் தனது பெயராகப் பெற்று, தொண்டை மண்டலத்திற்கு அணிகலனான ஸத்யவ்ரதக்ஷேத்ரத்தின் நடுவில் உள்ளதாய், அயோத்யை மதுரை ஹரித்வாரம் காசீ

காஞ்சீ அவந்தி த்வாரகை என்ற முக்தி தரும் நகரங்கள் ஏழின் நடுவில் எண்ணப்பட்டதாய், கவிகுல சக்ரவர்த்திகளான ஸ்ரீ வேதாந்த தேசிகரால் 'நகரீஷு காஞ்சீ' நகரங்களுக்குள் காஞ்சீ உயர்ந்தது-என்று கொண்டாடப் பெற்றதுமான காஞ்சி மாநகரில் வசிப்பவராகையால் இந்நூலாசிரியர் 'காஞ்சீவாஸீ' எனப் பட்டார்.

'ஸ்ரீ ஹயமுக சரணஸேவீ'—'வித்யோபதேசத்திற்கு அநுகூலமான - ஆஸநபீடம் பத்மாஸநம் ஞான முத்திரை புஸ்தகம் ஜபமாலை நெற்றிக்குறி புன்சிரிப்பு தெளிந்த கண்கள் தெளிந்த முகம் ஆகிய தன்மைகளாலே அழகு பெற்றதான சிவபிரானுடைய மூர்த்தி (=தக்ஷிணாமூர்த்தி), தாமரையோனின் தரும பத்னியான ஸர்ஸ்வதிதேவி, மதிக்கத் தக்க வாக்கைப் பெற்ற வியாஸர் பராசார் வால்மீகி முதலியோர் ஆகிய இவர்களெல்லோரும், பரிமுகப் பெருமானே, உம்முடைய சக்தியில் சில திவலைகளினால் விளங்குகிறார்கள்' (ஹயக்ரீவஸ்தோத்ரம்-6) என்றிது முதலாகக் கூறியபடியே வேதோபதேசம் முதலியவற்றால் அறிவை உதவியருளிய விபவாவதாரமாகிய (=இராமபிரான் கண்ணபிரான் இவர்கள் போல் இவ்வுலகில் அவதரித்த) ஹயக்ரீவரை வணங்குவதில் ஊற்றமுடையவர் இவ்வாசிரியர் என்றபடி.

'வால்மீகே: பாவ தீபம்'—வால்மீகியின் திருவுள்ள விளக்கு என்ற நூலாகிய விளக்கையென்றபடி.

'ரகுவர சரணாம்போருஹ ஸ்நேஹ தீப்தம்' — உலகில் பிரசித்தமான விளக்கு நெய் எண்ணெய் முதலிய ஸ்நேஹத்தினால் எரியுமது. இந்நூலாகிய விளக்கோவெனில் இராமபிரானுடைய திருவடித்தாமரைகளில் ஏற்பட்ட ஸ்நேஹமென்னும் பக்தியினால் எரியுமது. (ஸ்நேஹமென்பது - நெய் முதலியவற்றிற்கும் பக்திக்கும் பெயர்.)

'ஸ்வாந்த த்வாந்த ஓக வித்வம்ஸநம்'—பிரசித்தமான விளக்கு புறவிருளின் திரட்சியைப் போக்குமியல்வுடையது. இதுவும் அகவிருளாகிய அறியாமை ஐயம் திரிபுணர்ச்சி முதலியவற்றைப் போக்குமியல்வுடையது. இது இந்நூல் தீபத்தோடு ஒப்புமை பெற்றதென்பதற்கு மற்றொரு காரணமாகும்.

'அசலம்'-பிரசித்தமான தீபம் காற்றால் அசைக்கப்பட்டு அணைந்து போகும். இதுவோவெனில் எதிரிகளில் துர்வாதங்களாகிய காற்றினால் அசைக்க முடியாமையால் அணையாது நிற்கும். இது தீபத்தை விட இந்நூலுக்கு உள்ள வாசியாகும்.

'தீப்ரம்' நன்றாக விளங்குமதுஎன்றபடி.

ஹயவதந சரணபங்கஜ வரிவஸ்யாலப்த
தத்வவிஜ்ஞாந:|
ஸ்வயமேவாநந்தார்யோ வ்யவ்ருணோத்
வால்மீகி பாவதீப மிமம்||

பரிமுகப் பரமனின் பாதபங்கயங்களில் பண்ணும் பரிசரியையினால், பரம்பொருளைப் பற்றிய பரமார்த்த போதத்தை = உண்மையறிவைப் பெற்ற அனந்தாசாரியன், தானே வால்மீகி திருவுள்ள விளக்கு என்னும் இந்த இருபது ச்லோகங்களைக் கொண்ட நூலை இயற்றித் தானே அம்மூல நூலைப் பேருரை செய்து விவரித்தானாயினன்.

வால்மீகி திருவுள்ள விளக்கு மூலமும் உரையும் முற்றும்.

முடிவுரை:

ஸ்ரீ காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் ஜகத்குரு காதி அனந்தாசார்யஸ்வாமி என்று பிரசித்தி பெற்ற புலவர் பெருமான் 'வால்மீகி பாவ தீபம்' என்னும் பெயரில், வால்மீகி முனிவர் தமது ஸ்ரீராமாயணத்தில் இராமனைக் திருவவதரித்த திருமாலைப் பரம்பொருளாக அறிவித்துள்ளாரென்ற விஷயத்தைத் தக்க சான்றுகள்காட்டி விளக்கும் ஒரு நூலையும் அதற்கு ஒரு உரையையும் வடமொழியில் இயற்றியருளித் தாமே கி. பி. 1904 ம் ஆண்டில் அதனை அச்சிட்டு வெளியிட்டருளினார். அதனைப் பலமுறைகள்படித்து மகிழ்ந்த அடியேன் வடமொழியில் பரிசயம் இல்லாதவர்களும் இதன் கருத்தை அறிந்தால் மிகவும் நல்லதென்று கருதித் தெரிந்தவரையில் அதனைத் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட நினைத்தேன். திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் வெளியிடும் சமய மாதவிதழான ஸப்தகிரி பத்திரிகையின் ஆசிரியர்களிடத்தில் இந்நினைவை விண்ணப்பித்தேன். அவர்களை இதனைத் தயை புரிந்து அச்சிட ஏற்றுக்கொண்டு 1986 மார்ச்மாதம் முதலாகச் சிறிது சிறிதாக அச்சிட்டு வெளியிட்டு வருகிறார்கள். ஏறக்குறைய இரண்டு வருடகாலம் ஸப்தகிரியில் தொடர்ந்து வெளிவந்த இந்நூல் இம்மாதத்தோடு முடிவு பெறுகின்றது. இப்படி உதவி புரிந்த ஸப்தகிரி ஆசிரியர்களுக்கு மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இம்மொழி பெயர்ப்பு நூலின் கண் அடியேனுடைய அறியாமை கவனக்குறைவு முதலியவற்றால் நேர்ந்த பிழைகளைப் பொறுத்தருளுமாறு ஸப்தகிரி வாசகர் பெருமக்களிடம் பிரார்த்தித்து விடைபெறுகிறேன்.

இங்ஙனம்
தி. அ. கிருஷ்ணமாசார்யன்.
30—1—88

முற்றும்.



# அரிபொங்கிக் காட்டுமழகு

அடியார் பக்கல் வாத்ஸல்யமும் அதே சமயம் அவர்கள் விரோதி பக்கல் ஏற்படும் மிக்க சீற்றமும் அற்புதமானது! "தெளிவைக் காட்டிலும் சீற்றமே உருக்கொண்ட நரசிம்ம அவதாரம் பக்தர்களுக்கு சரணம்" என்றும் பெரியோர் வாக்கு நமக்கு வழிகாட்டுவதாக அமைகிறது.

இரணியன் என்னும் கொடிய அசுரன் தான் பெற்ற வர பலத்தாலே வலிமைமிக்கவனாகத் திகழுகிறான். தேவர் மனிதர் மற்றுமுள்ள உயிர்களாலும் பகல் இரவு ஆகிய நேரங்களிலும் வானத்திலும் பூமியிலும் வீட்டிலும் வெளியிலும் தனக்கு மரணம் உண்டாகக் கூடாது என்பதே அவன் பெற்ற வரத்தின் பெருமை. இத்தால் அஹங்காரியான அவன் தன்னையே கடவுளாகப் பாவிக்க ஆரம்பித்தான். அத்தோடு இல்லாமல் எல்லோரையும் தன் பெயர் சொல்லி வழிபடச் செய்ய கண்டிப்புச் செய்தான். மீறினோர் கடுந் தண்டனைக்குள்ளாயினர்.

அவன் மகனாகிய பிரகலாதனோ திருமால் பக்தனாகத் திகழுகிறான். அவனோ நாராயணன் அன்றி மற்றொரு நாமத்தைச் சொல்லாதவனாகத் திகழுகிறான். அவனைத் திருத்தச் செய்த பல முயற்சிகளும் பழுதாயின. அவனைக் கொல்லும் முயற்சிகளும் தோல்வி கண்டன. நாராயணனின் கருணை வெள்ளம் எல்லாக் கொடுமைகளினின்றும் அவனைக் காப்பாற்றியது.

இத்தால் வெகுண்ட இரணியன் ஒரு தினம் சாயங்காலம் 'நீ சொல்லும் அந் நாராயணன் எங்கு உளன்?' என்று பிரகலாதனைக் கடிந்து கேட்டான். 'தூணிலுமுளன் துரும்பிலுமுளன் எங்குமுளன்' என விடை பகர்ந்தான்.

" எங்குமுளன் கண்ணனென்ற
மகனைக் காய்ந்து
இங்கில்லையாலென்று இரணியன்
தூண் புடைப்ப"

(திருவாய் மொழி 2.8.9.)

என தன் முன்னேயுள்ள தூணைப் புடைத்தான். திருமாலோ மாயக் கள்ளன்! தனக்குத் தெரியாமல் வேறோர் தூணிலோ அல்லது பொருளிலோ ஒளிந்திருந்து தோன்றுவனோ. இத்தூணோ "அளந்திட்ட தூண்" (பெரியாழ்வார் திருமொழி 1-6-9) என்றவாறு அவன் தன் கண் காணிப்பிலே கட்டப்பட்டது போலும்! செங்கலும் சாந்துமே கொண்டு கட்டிய அத்தூணில் நிச்சயமாகத் திருமால் ஒளிந்து கொண்டிருக்க முடியாது அல்லவா? அதனால் அத்தூணை அவன் உறுதியோடு தட்டினான்.

என்ன ஆச்சர்யம்! தட்டின வாறே "தூணாய் அதனூடு அரியாய் வந்து தோன்றி" (பெரிய திருமொழி 1-10-5) என்றவாறு உள்ளே நரசிம்மத்தை வைத்துக் கட்டின தூண் இல்லை என எண்ணும்படி அத் தூணினின்றும் தோன்றினான், நரசிம்மனாய். மேலும் "வாளிறத்தோர் சீயமாய்" (திருச்சந்தவிரு. 23) என்றவாறு காளமேகம் போன்ற தன் கரிய நிறத்தையும் விடுத்து வெண்மை நிறத்தையும் ஏறிட்டுக் கொண்டான். தன் சுயரூபத்தையே அழித்து மிருக ஜாதியான சிம்மத்தின் ரூபத்தைக் கொண்டவனுக்கு இது ஒரு சாகஸமோ?

இத்திருமேனி சீற்றமே வடிவெடுத்துக்கொண்டது போலும். நீண்டு வளைந்த அதன் பற்கள் பளபளக்க, நீண்டு வளர்ந்த தன் நாக்கைப் பல்லோடு சேர்த்து வாயை மென்று கொண்டிருக்கும் நிலை, என் இரையை, சீக்கிரம் கொடு என்பது போல். எறிவட்டக் கண்கள் என எண்ணலாம்படி கண்கள் சிவந்து அனலைக் கக்குகின்றன. திறந்த வாயோ குகை போன்று அதனின்றும் தீயை உமிழ்கின்றது. ஐயோ! சீற்றத்தின் கடுமைதான் என்னே! இதனை "மென்ற பேழ்வாய் வாளெயிற்றோர் கோளரியாய்" (பெரிய திருமொழி 1-7-5) என திருமங்கையாழ்வார் அனுபவித்து மகிழ்கிறார்.

---

திரு. வி. இராகவன் — பள்ளத்தூர்.

---

திருத்த முடியுமோ? என பலவாறு சோதித்துப் பார்த்த பின்னரே இராமன் போரில் இராவணனை மாய்த்தது. அவ்வாறு செய்ய முடியாதே இப்பொழுது. "தூணிலுமிருக்கிறான்" என்னும் பிரகலாதன் வார்த்தையை உடன் மெய்ப்பிக்க வேண்டுமே. ஆகவே இரணியன் பெற்ற வரத்தின் வலிமைக்கீடாக, தானும் நரவுருவும் சிம்மவுருவும் இணைந்த நரசிம்ம உருவாய் உடன் தோன்றினான். இந் நரசிங்க உருவைக் காண தேவர்களும் தானவர்களும் மற்றுமுள்ளாரும் நடுங்கினர். எந்தெந்தப் பொருளிலிருந்து எவ்வெவ்வுருவோடு தோன்றுவனோ என அஞ்சும்படி "திண்ணிய தோரரியுருவாய்" (பெரிய திருமொழி 3-9-2) எனத் தோன்றினான். எதிரியெனச் சொல்லிக்கொண்டு தன் முன் யாரும் இதுவரை வந்ததில்லை. இன்றோ

தன் முன் வலிமைமிக்க பயங்கர ரூபத்தோடு ஒருவன் தோன்றியிருக்கிறான். அவனைக் காணக் காண கோபமே மிகுந்து அது உச்சக்கட்டத்தையடைந்தது.

“அந்திப் பொழுதத்துமங்க” (3ம் திருவந்தாதி 65) என்றவாறு அசுரர்களுக்கு அந்தி வேளையானால் அவர்களுக்குப் பலம் அதிகமாகும். அந்நேரத்திலே இரணியனுடன் போரிடுவது தன் வீரத்திற்கு ஒக்கும் என முடிவு செய்தான் போலும். நான்முகனை முதலில் படைத்து, ‘உலகைப் படை’யென்று சொல்லி தன் காரியம் கொள்ளுமவன் இன்று தானே அடியார் காரியம் புரிய நேரில் தோன்றினான். அடியார் திறத்திலே கொண்ட வாத்ஸல்யமன்றோ அவனை இப்படிச் செய்யச் செய்தது. இச்செயலில் ஈடுபட்டு “போழ்ந்த புனிதன்” (பெரிய திரு. 1-7-1) என திருமங்கை மன்னன் புகழ்ந்து பெருமிதம் கொள்ளுகிறார்.

விரோதியான இரணியன் அச்சம் கொள்ளும் வண்ணம் வந்து தோன்றினான். பரம பாகவதனான பிரகலாதன் அச்சம் கொள்ளும்படி இது ஆகக் கூடாதென்று “தளையவிழ் கோதை மாலையிருமால் தயங்க” (பெரிய திரு. 11-4-4) காணக் கண்கள் குளிரும்படியாகப் பரிமளமிக்க செவ்வி குன்றாத மாலை தன் மார்பின் இருபுறமும் அசைந்தாடத் தோன்றினான். பிடித்த பிடியிலே பிணமாம்படி இரணியனைப் பற்றி இழுத்தான். “உளந்தொட்டு” (பெரியாழ்வார் திரு. 1-6-9) என இவன் நெஞ்சில் கொஞ்சமேனும் ஈரம் இருக்கிறதோவென்று பார்த்தான். குரோதமே தலை தூக்கியிருக்க ‘இவன் இனிப்பொருந்தான்’ என்றறிந்தவாறே “பற்றிப் பொருந்தாதான் மார்பு” (2ம் திருவந்தாதி 94) என அவன் மார்பை இரு கூறாகப் பிளந்து அவனை அழித்தான்.

பிரும்மாதிகளாலே அளிக்கப்பட்ட வரங்களாலே இரணியன் தன் மார்பை திண்மை பெறச் செய்து வைத்திருந்தான். வேட்டையாட மிருகங்களுக்குச் சத்துள்ள உணவு கொடுத்து வளர்ப்பாரைப்போல் தன் மார்பைப் பேணி வளர்த்தான் போலும்! மென்மைமிக்க பிராட்டிமார்கள் தொட்டாலே கன்றி விடும் மென்மைமிக்கவன் தன் கூரிய நகங்களால் இரணியனின் கடுமையான மார்பைக் கிழித்தான்.

இதுவரை காணாத சீற்றமிகு சேராச் சேர்த்தியான நரசிங்கவுருவைக் கண்டதுமே இரணியனிடம் அச்சம் குடிகொண்டது. அச்சம் என்னும் வெப்பம் அவனை வாட்டியெடுத்தது. உண்ணுவதற்குப் பாங்காக மிருகங்களைத் தீயிலே வாட்டி வைப்பாரைப்போல், அவன் மார்பகம் அச்சத்தால் வெதும்பிக் கிழிப்பதற்குப் பக்குவமாய் இருந்தது போலாயிற்று. வீரபத்தினியான ‘விஜயஸ்ரீ’ அணையுமிடம் திருமாலின் திருமார்பன்றோ. கிழித்தக் குடலைத் தன் மார்பிலே வெற்றி மாலையாகச் சூட்டிக் கொண்டான். வெற்றி வாகை சூடாவிடில் ‘விஜயஸ்ரீ’ இவனை அண்ட மாட்டாளே! பிராட்டிமார் அணைவதற்காகக் குங்குமத்தால் அலங்கரிக்கப்பட்ட தன் மார்பில், இரத்த வெள்ளத்தில் கிடக்கும் இரணியன் உடலைக் கிடத்திக் கொண்டான். அடியானின் துயர் தீர்த்தோம் என்னும் உகப்புத் தோற்ற ஆர்ப்பரித்து முழங்கினான். இதனைச் சிறிய திருமடலிலே திருமங்கையாழ்வார்,

...பொன் பெயரோனாகத்தை
கூரார்ந்த வள்ளுகிராற் கீண்டு, குடல் மாலை
சீரார் திருமார்பின் மேற்கட்டிசெங்குருதி
சோராக் கிடந்தானைக் குங்குமத் தோள்கொட்டி
ஆராவெழுந்தான்”

என அனுபவிக்கிறார்.

நரவடிவும் சிம்மவடிவும் கொண்டு திகழ்ந்தாலும் ஒருங்கே சீற்றத்தையும் அருளையும் காண முடிகிறது. இரணியன் மீதே சீற்றம். பிரகலாதனுக்கோ நரசிம்மனின் திருவடிகளின் கீழே வந்து புகுரலாம்படி இருந்தது. கோபத்திலே அனல் கக்கும் சிவந்த கண்களானாலும் அக்கண்கள் வாத்ஸல்யத்தையும் ஒருங்கே உள்ளடக்கிக்கொண்டு வெளியிடும் கண்களாகத் திகழ்கின்றன. இதுதான் நாம் பிரகலாதன் விஷயத்தில் கண்டது. இங்கோர் ஐதிகம் காணக் கிடக்கிறது. “நரசிம்மமூர்த்திக்குச் சீற்றம் அளவு மீறிப் பொங்கிச் செல்கையில் சினுக்கன் எங்கனே அணுகி நிற்க வல்லவனாகினன்?” என எம்பெருமானாரைச் சிலர் கேட்க, “சிம்ஹம் யானை மேல் சீறினாலும் குட்டிக்கு முலை உண்ணலாம்படியிருக்குமன்றோ?” என்று அருளிச் செய்தார். அடியார்களிடத்தில் ஏற்பட்ட அன்பிலே அவர்கள் விரோதி மேல் சீறின சீற்றமானால் பின்னர் அடியார்கள் அவனை அணைய முடியாதபடி இருக்காதே?

தீயை உமிழ்ந்த அதே திருப்பவளவாயிதழ்தான் ‘ஸ்மிதம்’ ஒன்றினாலே அடியாரை ஈடுபடுத்தும்படியாயிருக்கிறது. கொள்ளிவட்டக் கண்களானவைதான் வாத்ஸல்யம் தோன்ற அடியாரை வசப்படுத்துகிறது. தன்னோடு அணைத்துக்கொள்ளும் அவனே சீறும் நரசிம்மனாகிறான். “தூயாய்! சுடர் மாமதி போல் உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தன் தாமரைக் கண்ணா!” (பெரிய திருமொழி 7-1-9) என்றவாறு தாபங்களையெல்லாம் போக்கும் பூரண சந்திரன் போன்று எல்லா ஜீவராசிகளையும் தாயைப்போல் அணைத்துக் காத்திடும் தாமரைக்கண்ணன் அடியானாகிய ஒருவனுக்காக நரசிம்மனாய்ச் சீறிக் காட்டிய இவ்வழகிலே லயித்து “அரிபொங்கிக் காட்டுமழகு” (நான்முகன் திருவந்தாதி 21) என பரவசமாகிறார் திருமழிசைப்பிரான்.

சீற்றமே நரவுருவாயும் சிம்மவுருவாயும் கொண்டு அரியாகிப் பொங்கிக்காட்டினும் அவன் தன் திருமேனியின் நரவுருத்திருவடி, அருள் வெள்ளத்திற் பூத்த தாமரை மலர்களாய் நமக்குச் சரணம் ஆமே. ★

# வைணவ பக்தி இயக்கத்தில் மதுரகவி படைத்த புதுமை

ஆழ்வார்களும் நாயன்மார்களும் நடைமுறைப் படுத்திய பக்தியியக்கம் தமிழர் சமுதாய வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தின் தொடக்கமாக அமைந்தது. தொண்டராக - தொண்டரடிப் பொடியாக - அடியாராக - அடியார்க்குமடியாராகத் தங்களை உருவாக்கிக் கொண்ட பக்தியியக்க நாயகர்கள் அன்பையும் சேவையும் வலியுறுத்திப் புதிய வாழ்வுக்கு வழி காட்டினார்கள். தங்களையே முன்மாதிரியாக்கித் திருத்தொண்டிற்கு இலக்கணம் வகுத்தார்கள்; நாடு தழுவிய பாத யாத்திரைகளை மேற்கொண்டார்கள்; இறையில்லங்களுக்கு விஜயம் செய்தார்கள்; நித்திய யோகிகளாய் - பயன்களைத் துறந்தோராய் - உயர்ந்த நம்பிக்கையுடையோராய் - நன்மை தீமைகளைக் கடந்தோராய் இறைவனை வழிபட்டு நின்றார்கள்; திருவாய் மலர்ந்தருள, அவை திருப்பல்லாண்டாய் - திருவந்தாதிகளாய் - திருவிருத்தங்களாய் - திருமொழிகளாய் - திருமடல்களாய் தமிழர் வாழ்வினில் பக்தி மணம் பரப்பின.

டாக்டர். இரா. பொன்னு பிஎச். டி.
உதகமண்டலம்.

வைணவ பக்தியியக்கத்தை நடத்திய ஆழ்வார்களுள் ஆண்டாளும் மதுரகவியும் தத்தம் பக்தி நிலையில் தனித்துவம் பெற்று விளங்கினர். இறைவனிடம் காதலுற்று அவனையே மணாளனாய் எண்ணித் தனது பக்தியை வெளிப்படுத்திய சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாள் 'பிராட்டியார்' என்ற தெய்வீக நிலைக்குச் சென்றதும், திருமாலையே பரமாகக் கொண்டு ஏனைய ஆழ்வார்கள் வழிபட்டுப் பக்தியினைக் காட்டியபோது, மதுரகவி தனது குருவான சடகோபனையே தெய்வமென்று போற்றி நின்றதவும் உண்மையில் வேறுபட்ட பக்தியைத் தான் காட்டுவதாக அமைந்துள்ளது. வைணவ பக்தியியக்கத்தில் புதிய நெறி கண்டவர் - தொண்டர்க்குத் தொண்டு செய்தவர் - அடியாரையே ஆண்டவனாக்கி அழகு பார்த்தவர் - திருவாய் மலர்ந்தருளியவரைத் திருவின் உருவமாகவே எண்ணி மகிழ்ந்தவர் - சாதி வேறுபாடுரைத்த சழக்கர்களின் மத்தியில் எவ்வித ஆர்ப்பாட்டமுமின்றி, சமதர்ம நெறியினைப் பக்தி நெறி வாயிலாக நிலை நாட்டியவர் மதுரகவி.

ஆழ்வார் திருநகரி என்று இன்று வழங்கப் பெறும் திருக்குருகூரில் பிராமண குடும்பத்தில் தோன்றிய மதுரகவி, நம்மாழ்வாராய்ச் சிறப்பெய்திய சடகோபனின் ஆன்மீக ஞானத்தையும் இறையின்பத்தையும் தமிழ் வேதம் படைத்திட்ட திறனையும் கண்டு அவரையே தனது குருவாகக் கொண்டார். திருமாலின் அவதாரமாகவே சடகோபனை நோக்கினார். திருமால் பக்தியை அவனின் அடியாரான சடகோபனிடமே காட்டினார். அவரையே சரணடைந்தார். அவர்க்குத் தொண்டு செய்வதிலே இனிமை கொண்டார். இறையுணர்வைத் துய்த்தார். தான் இயற்றிய ஒரே பாசுரமான கண்ணிநுண் சிறுத்தாம்பையும் சடகோபன் புகழ் பாடுவதாகவே படைத்திட்டார்.

தமிழ் பக்தியியக்கத்தில் திருத்தொண்டர் வழிபாடு ஒரு சிறப்பம்சமாகவே காணப்பட்டது. திருத்தொண்டரை வழிபடுவது என்பது இறைவனை வழிபடுவதாகவே கருதப்பட்டது. சைவ பக்தியியக்கத்தைப் பொறுத்தவரை நம்பி ஆரூரார் திருத்தொண்டர்த்தொகை இயற்றி 'அடியார்க்கும்மடியார்' எனத் தன்னை வெளிக்காட்டிக் கொள்வதில் பெருமை அடைந்தார். திருத்தொண்டர் புகழ்பரப்பிடச் சேக்கிழார் புராணமே படைத்தார். நாவுக்கரசர் ஆவுரித்துத் தின்றுழலும் புலையனும் உண்மை அடியாராயின் அவரையும் வணங்கிட முன்வந்தார். நம்மாழ்வாரும்,

அழகும் அறிவோமாய் வல்வினையும்
தீர்ப்பான்
நிழலும் அடிதாறும் ஆனோம்-சுழலக்
குடங்கள் தலை மீதெடுத்துக் கொண்
டாடி அன்றத்
தடங்கடலை மேயார் தமக்கு

என அடியார் பெருமையை நோக்கினார். தனது குருவின் வாய்மொழிக்குச் செயல் வடிவம் கொடுத்துச் சிறப்பித்தவர் மதுரகவி. சடகோபன் புகழ்பாடுகையில்,

நாவினால் நவிற்றி இன்பமெய்தினேன்
மேவினேனவன் பொன்னடி மெய்ம்
மையே
தேவு மற்றறியேன் குருகூர் நம்பி
பாவினின்னிசை பாடித் திரிவனே

எனக் களிப்படைந்தவர். பின்பழகிய பெருமாள் மதுரகவி பற்றிக் கூறுகையில் 'தனது குருவின் விக்கிரகத்தினை வைத்து வழிபட்டு வந்தார்' என்றே கூறுவார். வைணவ பக்தியியக்கத்தில் அருள் தொண்டரை வணங்குகின்ற முறையினை நடைமுறைக்குக் கொண்டுவந்ததில் முன்னோடியாகவே மதுரகவி திகழ்கின்றார்.

சமுதாயத்தில் நிலவிய சாதிக் கொடுமைகளுக்குப் பக்தி நெறியில் தீர்வு காண விழைந்தவர்கள் தங்களின் பதிகங்களில் - பிரபந்தங்களில் சாதி வேற்றுமைக்கு எதிரான தங்களின் எண்ணங்களை ஆங்காங்கே உணர்த்தினர். நாவுக்கரசர்,

சாத்திரம் பல பேசுஞ் சழக்கர்காள்
கோத்திரமுங் குலமுங் கொண்டென்
செய்வீர்

எனக் கண்டனம் செய்தார். ஞான சம்பந்தரோ பாணரோடு பண்ணிசைத்து மகிழ்ந்தார். தொண்டரடிப் பொடி ஆழ்வாரும்,

வேதமோர் நான்கும் ஓதி
தமர்களில் தலைவராய்
சாதியந்தணர்களேனும்
நுமர்களைப் பழிப்பாராகில்
நொடிப்பதோரளவில் ஆங்கே
அவர்கள் தாம் புலையர்போலும்

என இகழ்ந்துரைத்ததுடன்,

இழிகுலத்தவர்களேலும்
எம்மடியார்களாகில்
தொழுமின்நீர், கொடுமின்,
கொள்மின்!

என வேண்டுகோள் விடுத்தார். நம்மாழ்வாரும்,

குலந்தாங்கு சாதிகள் நாலிலும்
கிழிழிந்து எத்தனை
நலந்தா னிலாத சண்டாள சண்
டாளர்களாகினும்
வலந்தாங்கு சக்கரத்தண்ணல் மணி
வண்ணற்காளென்று உள்
கலந்தார், அடியார் தம் அடியாரெம்
அடிகளே.

எனச் சண்டாளர்களாகினும் அவர்கள் உண்மை அடியாரெனில் அவர்கள்தம் அடியாராகி நிற்பதில் பெருமிதம் கொண்டார்.

சாதிஏற்றத்தாழ்வுகளுக்கெதிரான நாயன்மார்களும் ஆழ்வார்களும் எழுப்பிய கண்டனங்கள் வன்மையாக வெளிப்பட்ட போதிலும் மதுரகவி-சடகோபன் உறவு சாதிய அமைப்பின் அடிப்படை கோட்பாட்டிற்கே ஒரு சவாலாக அமைந்தது. சூத்திர வகுப்பைச் சார்ந்த சடகோபனைப் பிராமண வகுப்பைச் சார்ந்த மதுரகவி ஆன்மீகக் குருவாக ஏற்றுக் கொண்டதுடன், தனது பக்தியையும் அவர் மாட்டு மட்டுமே செலுத்தியது தமிழர் சமயவாழ்வில் புரட்சிகரமானதாகவும், பக்திநெறி தாங்கி நின்ற ஒருமைப்பாட்டை வெளிக் காட்டிடும் ஒரு புதுமை நிகழ்வாகவும் அமைந்தது. மதுரகவியின் இச்செய்கையினை வைதீக பிராமணர்கள் அங்கீகரிக்கவில்லை. வைதீக சமய வாதிகளைப் பொறுத்தவரை உண்மை பக்தியானது 'உபாசனம்' என்னும் பண்டைய தியான முறைவாயிலாகவும், வேத கல்வியோடு தொடர்புடையதான வழிபாடாக இருந்தமையால் பிராமணர்கள் மட்டுமே அடைய முடியும் எனவும் சூத்திர வகுப்பார்க்கு நேரடியாகக் கிடைத்திடயியலாது எனவும், நிபந்தனையற்ற பக்தியான பிரபக்தி வாயிலாகப் பக்தியினை வெளிப்படுத்தும் முயற்சியில் கூட வேத நெறியில் சிறந்து விளங்கிடும் குருவின் துணையோடுதான் எட்ட முடியும் என்பது அவர்கள் எண்ணமாகையால், பக்தியில் திளைத்துப் பரம் கண்ட நம்மாழ்வாரைக் குருவாக ஏற்றமையினைக் கடுமையாக விமர்சித்தார்கள். ஆனல் மதுரகவியோ,

நன்மையால் மிக்க நான்மறை
யாளர்கள்
புன்மையாகக் கருதுவர் ஆதலின்
அன்னையாய் அத்தனாய் என்னை
யாண்டிடும்
தன்மையான் சடகோபனென் நம்பியே

எனத் தெளிவுபடுத்தினர்.

வேதியர் வேதத்தின உட்பொருளுரைத்து அருள் கொண்டாயிரம் இன்தமிழ்பாடியமைக்குத் தனது குருவைப் போற்றினர்; தென்குருகூர் நம்பியென்றக்கால் அண்ணிக்கும் அமுதூறுமெனவும், வேறொன்றும் நானறியேன், வேதம் தமிழ்செய்த மாறன் சடகோபனையே எமது வாழ்வாமென் றேத்தினர்; சடகோபனைத் தவிர தேவு மற்றறியாது அவன் புகழ்பரவி இன்னிசை பாடித்திரிவதிலே இன்பம் கண்டார்; அன்பர் தன்னை அடைந்தவர்கட்கெல்லாம் அன்பனை நம்பியின் அன்பனாய் - நம்பியை நாவினல் நவிற்றி இன்பம் எய்தியவராய் - அவனின் பொன்னடியையே மெய்ம்மையென்று மேவியவராய் - அவனுக்கே உரியனாய் - எழுமையும் அவன்தன் புகழ் ஏத்த அருளினன் என்னும் உவகையராய் விளங்கினர். தனது குரு என்றுமே தன்னை இகழ்விலன் எனவும், பண்டை வல்வினையும் மாற்றியருளியவன் எனவும், ஒண்தமிழ் நம்பியின் அருளை எண்திசையும் அறிய இயம்புவேன் எனவும், அருமறையின் பொருள் அருள் கொண்டாயிரம் இன்தமிழ் பாடிய நம்பிக்கு ஆட்புக் காதலடிமைப் பயனன்றே எனவும் பாடித்திரிந்தார். பக்திக்குப் புதுமை சேர்த்தார்.

சூத்திர அடியார் அருளிய தமிழ் வேதத்தை ஏற்றுக் கொண்ட முதல் பிராமணராக - பிரபந்தங்களைத் தொகுத்து கோயில் வழிபாட்டில் இடம்பெறச் செய்து தமிழ் வேதம் பரப்பிட தொண்டாற்றிய நாத முனிக்கு முன்னேடியாக - சமய வாழ்வில் தமிழ் மொழிக்கு சம்ஸ்கிருதத் திற்கிணையான அந்தஸ்தினைச் சமய வாழ்வில் பெற்றுத் தந்த அருளாளராக - சமதர்ம நெறிக்குச் சான்று பகர்ந்த சான்ருேராக - இறைதொண்டர் பெருமை ஒன்றையே பேசிய இறையன்பராக - தெய்வீக நெறியில் தன்னைச் சேர்த்துக் கொண்டார். அடியார்தம் அடியாராகித் திவ்ய பிரபந்தத்துள் சிறுத்தாம்பைத் தவழவிட்டு இறையின்பம் கண்டார். வைணவத்தில் வழிபாட்டுக்குரியவரானர்.

★



# மாரியம்மன் திருவிழா

திரு. கா. மு. பாபுஜி, எம்.ஏ.,
திருப்பதி



சக்தி வழிபாடு தமிழரிடையே மிகப் பழங்காலத்திலிருந்தே தொடர்ந்து வருகிறது. தமிழர் வாழ்கைக்கு இலக்கணம் கூறும் தொல்காப்பியர், ஐவகை நிலங்களுள் ஒன்ருகப் பாலை நிலத்தைக் குறிக்கிருர். அதன் தெய்வமாகக் கொற்றவையை எடுத்துச் காட்டுகிருர். சக்தியை முதன்மையாகக் கொண்டு வழிபடும் சமயம் சாக்தமாகும். அத்தகைய சக்தி வழிபாடு இன்று சிறு தெய்வ வழிபாடாக - ஊர்தோறும் பிடாரி,காளி, அங்களா ஈஸ்வரி,துர்க்கை, பொன்னியம்மா, கன்னியம்மா போன்ற பல தெய்வங்களாக—மக்கள் வணங்கி வருகின்றனர். இத்தெய்வங்களைக் கிராம தெய்வங்கள் என்று அழைப்பார்கள். இத்தகைய தெய்வங்களுள் மக்கள் சிறப்பாக வழிப்பட்டு வருவது மாரியம்மன் ஆகும். அம்மை, காலரா ஆகிய இரண்டும் மக்களை மிகுதியாக பாதிக்கிறது. இதனுல் மக்கள் பீதியடைக்கின்றனர். மாரியம்மாவின் சீற்றமே இந்நோய்க்குக் காரணம் என்றும், அந்நோயிலிருந்து காப்பாற்ற முனைகின்ற மக்கள் இந்த அம்மனுக்குச் சிறப்பாக வழிபாடு செய்கின்றனர். இந்நோய் நாடு முழுவதும் பரவலாக உள்ளதால், மாரியம்மன் வழிபாடு மக்களிடையே மிகுந்த செல்வாக்குப்பெற்று காணப் படுகின்றது.

மாரி என்ருல் மழை என்று பொருள். மழை மக்களைக் குளிர்ச்சி அடையச் செய்கிறது. அதுபோல் அவளை வணங்குவோர்க்கு அருள் புரிந்து மகிழ்விப்பாள்.

பெரியம்மைக்குரிய தெய்வமாகிய அம்மனைச் சில இடங்களில் கங்கம்மா என்று சொல்லுவர். இவ்வம்மைக்கு தந்தேசுவரி, புனனேசுவரி என்றும் மத்திய இந்தியாவில் பெயருண்டு.

மாரியம்மாவின் வரலாற்றைக்கூற பல கதைகள் உண்டு. அவை பின்வருமாறு:

ஜமதக்னி ருஷியின் பத்தினி ரேணுகை. ஜமதக்னி முனிவர் கார்த்தவீரியன் புத்திரரால் இறக்க, உடன் தீப்புக இவளது தேகம் வேகுமுன் இந்திரன் வருணனைக்கொண்டு மழை பொழிவித்துத் தணலைத் தணிவித்தான். ரேணுகை தரித்திருந்த ஆடை முழுவதும் எரிந்து உடம்பு முழுவதும் தீக் கொப்புளங்கள் தோன்றின. ரேணுகை எழுந்து ஆடையில்லாதால் அவ்வனத்திலிருந்த வேம்பின் தழைகளை ஆடையாகத் தரித்துக்கொண்டு அருகிருந்த புலைச்சேரியடைந்து,தனக்குப் பசிக்கிறது ஏதேனும் உணவு கொடுங்கள் என்று கேட்டாள். அவர்கள் இவள் யாரோ வேதியப்பெண் என்று எண்ணித் தங்கள் ஆகாரத்தைக் கொடுக்காமல் பச்சரிசி, வெல்லம், இளநீர், பானகம் முதலிய பொருளைக் கொடுத்து உபசரித்தனர். பிறகு வண்ணர் வீதி வந்து அவர்களிடம் ஆடைவாங்கித் தரித்துக்கொண்டுத் தன் கணவனை எண்ணித் துயருறும் போது, தேவர்கள் தோன்றி அவள் துயர்மாற்றினர். சிவமூர்த்தி இவளை நோக்கி,'நீ உன் சத்தியம் சமர்தலால் பூமியிலிருந்து கிராமத்தில் உண்டாகும் தீமைகளைப் போக்குவாயாக!' என்று வரம் தந்தார். மேலும் 'நீ கொண்ட தீக்கொப்பளங்கள் உலகத்து உயிர்களுக்கு அம்மைக் கொப்புளங்களாகும். அதனுலுண்டாகும் துன்பம் நீங்க, நீ தரித்த ஆடையாகிய வேப்பிலையே ஔஷதமாகும், நீ புசித்த பச்சரிசி, இளநீர், பானகம் ஆகியவை உனக்குரிய நிவேதனங்களாகும். உன்னை வணங்குவோர்க்குத் தீமையை விலக்குக. உன்னை வணங்கவில்லை எனில் உன்னருகிருக்கும் சண்டாள ரூபத்தை உன்னுள் கொண்டு வருத்துக' என்றும் வரந தந்து மறைந்தனர். அதனுல் இவள் 'முத்துமாரி' என்று பெயர் பெற்றுக் கிராமதேவதையாளுள்.

இதேபோன்று இன்னொரு கதை யுமுண்டு.

ரேணுகை என்பவள் ஜமதக்னியின் தேவி. இவள் நாள்தோறும் கங்கைக் குச் சென்று மணலால் குடம் செய்து பூசைக்கு நீர் கொண்டு வருவது வழக்கமாகயிருந்தது. ஒரு நாள் இவள் தண்ணீர் கொண்டு வருதற்குச் செல்ல அவ்விடத்தில் அந்தரத்தில் சென்ற காந்தருவனுகிய சித்ரசேநனை நீரில் கண்டு மனம் கெட்டது. இத ஞல் பூசைக்கு நீர் கொண்டு செல்ல முடியவில்லே. இதை அறிந்த முனி வர்,தன் மைந்தனுகிய பரசுராமருக்கு ரேணுகையைக் கொல்லுமாறு கட் டளேயிட்டார்.தந்தைச் சொல்லே மந் திரம் என்பது போல் தாயின் தலேயை வெட்ட சென்றபோது அவளைத் தன் தாய்க்கு அடைக்கலம் கொடுத்த வண் ணுத்தித் தடுக்க அவள் தலேயை வெட் டிய பிறகு தன் தாயின் தலேயையும் வெட்டி விட்டுத் தந்தையின் முன் வந்து நின்ருன். இதைக் கண்ட முனி வர் 'மகனே ஏதாவது வரம் வேண்டு மெனில்கேள்' எனக் கேட்க,அவன் தன் தாயை உயிருடன் எழுப்ப வேண்டு மென, முனிவரும் சம்மதிக்க,மகிழ்ச்சி வேகத்தில் சென்ற பர சுராமர் தன் தாய் தலேயை வண்ணுத்தி உடலுடனும், வண் ணுத்தி தலேயைத் தன் தாய் உடலு டனும் பொருத்தி மந்திர நீர் தெளித்து எழுப்பினர். எழுந்தவள் கணவரை அடைந்து வணங்க முனி வர், 'நீ இன்றுமுதல் கிராமங்களில் இருந்து மக்களுக்கு உண்டாகும் தீமை களேப் போக்கிக் காப்பற்றுவாய்' என வரமளித்தார். அன்று முதல் கிராம தெய்வமாக இருந்து வருகிருள். இவ ளுடைய உடல் மாறியதால் இவளே "மாறியாத்தா" என்பார்கள். அதுவே மாரியாத்தா எனத் திரிந் தது.மாரியம்மன் கோயில்களில் மாரி யம்மா தலே மட்டுமே இருக்கிறது. ஏன் என்ருல் தலேதானே மாரி யம்மா உடையது. ஆகவேதான் தலேயை மட்டுமே மக்கள் வழிபடு கின்றனர்.

சிலப்பதிகாரத்திலே பத்தினித் தெய்வமாகிய கண்ணகிக்குச் சேரன் செங்குட்டவன் கோயிலமைத்து விழா எடுத்தான். இதைக் கண்ட பல நாட்டினர் கோயிலமைத்து விழா எடுத்தனர். இதனுல் மழைபொழிந்து நாடு சிறப்படைந்தது. மேலும் மக் களுக்கு நோய், துன்பங்கள் நீங்கி யன. இக்கோயில்கள்தான் நாளடை வில் மாரியம்மன் கோயில்களாகமாறி போயிருக்கலாம் என்று சிலர் கூறு கின்றனர்.

இவ்வாறு சிறப்புப் பொருந்திய மாரியம்மனுக்கு எடுக்கும் விழாவை "ஜாத்திரை" என்பார்கள். அதைப் பற்றிச் சிறிது காண்போம்.

கிராமங்களில் மாரியம்மன் ஜாத்தி ரை மிகச் சிறப்பாக நடைபெறும் ஒரு விழாவாகும். சில நகரங்களி லும் இந்த விழா நடைபெறுகிறது. இவ்விழா பொதுவாகச் சித்திரை, வைகாசி மாதங்களில் நடைபெறும். ஜாத்திரைக்கு எட்டு நாட்கள் முன் பாகச் செவ்வாய் அன்று இரவு,இன்ன தேதியன்று அம்மனுக்கு விழாநடை பெறும் என்று பறைசாற்றுவர். இதையே 'சாட்டுதல்' என்பார்கள். அடுத்த செவ்வாயன்று விடியற் காலேயில் மண்ணுல் மாரியம்மன் சிலே செய்து அதற்குப் பல வண்ணங்கள் தீட்டி அலங்கரித்து ஓர் இடத்தில் அமர்த்துவர். அன்று நண்பகலில் இறைச்சிச் சோறும் கொழுக்கட் டையும் படையல் செய்வர். அன்று மாலே மாரியம்மாவை ஊர்வலமாக எடுத்துச் செல்வார்கள். அப்போது அம்மனேப் பலர் பலவிதமாக திட்டிக் கொண்டே எடுத்துச் சென்று கங்கை யில் விட்டு விடுவார்கள்.

திருப்பதியில்

ஆந்திரத்தில் மாரியம்மாவை "கங்கம்மா" என்று அழைப்பர். எனவே மாரியம்மன் திருவிழாவை கங்கம்மா ஜாத்திரை என்று அழைப் பார்கள். ஆந்திரத்தில் கங்கம்மா ஜாத்திரை என்ருல் அனேவருக்கும் உடனே நினேவுக்கு வருவது திருப்பதி தான். அவ்வளவு சிறப்பாக கங்கம்மா ஜாத்திரை அங்கு நடைபெறுகிறது.

ஜாத்திரைக்கு எட்டு நாட்கள் முன்பாக செவ்வாயன்று சாட்டுவார் கள். பிறகு செல்வாய் அன்று ஜாத் திரை. இந்த இடைப்பட்ட நாட்களின்போது மக்கள் தங்கள் வேண்டுதலுக்கு ஏற்ப பல வேடங்கள் போடுவார்கள். இவ்வாறு வேடம் போடுவதற்கு ஒரு கதை உண்டு. தேவர்கள் அனேவரும் கங்கம்மாவிடம் சென்று,'தாயே அரக் கன் ஒருவன் மக்களேத் துன்பப்படுத்து கிருன். அவனேக் கொல்ல எங்களால் முடியவில்லே. எனவே நீதான் அவனேக் கொல்ல வேண்டும்' என வேண்டுகின்ற னர். அதற்கு இணங்கி அம்மன் பைரவி, செட்டியார், தோட்டி, இடையன், மாதங்கி என்று ஒவ் வொரு நாளும் ஒவ்வொரு வேடம் போட்டுக் கொண்டு மக்களுடன் செல்வாள்.கடைசி நாளன்று அவனேக் கொல்லுகிருள். எனவேதான் மக் கள் மேலே சொன்ன வேடங்களே போட்டுக்கொண்டு ஊரைச் சுற்றிக் கடைசியில் கோயிலிடம் வந்து வணங் கிவிட்டுச் செல்லுவார்கள். செவ்வா யன்று இரவு கோயில்முன் திரை மறைவில் அம்மன் சிலே செய்வார்கள். விடியற்காலே நான்கு மணியளவில் அம்மனுக்கு பூஜை செய்து திரையை விலக்குவர். உடனே அம் மனுடைய ஓரப் பார்வையாகக் கண் ணேத் திருப்பி விடுவார்கள். காரணம் ஒரு காலத்தில் நேர் பார்வையாக இருந்ததால் அம்மன் கண்ணுக்கு எட்டிய தூரம் எரிந்து விட்டதாம். எனவேதான் ஓரப் பார்வையாக கண்ணேத் திருப்புகிருர்கள். சூரியன் எழுவதற்குள் மக்கள் அம்மன் சிலே யில் இருந்து மண்ணே எடுத்துச் சென்று விடுவார்கள். பிறகு அன்று முழு வதும் மக்கள் கோயிலுள்ள அம்மனே வழிபட்டுச் செல்லுவார்கள்.

தந்தையைக் காட்டிலும் அன்னே தான் பிள்ளேயிடம் அன்பாகவும், வேண்டியதையும் கொடுப்பவளாக வும் இருப்பாள். அதேபோல் தெய் வங்களுள் சக்திதான் பக்தர்களுக்கு வேண்டியதை உடனே அருள்புரி வாள்.எனவே, அச்சக்தியை வணங்கி அருள் பெறுவோமாக! ●

# ஸ்ரீமத் இராமாயணம் மூலம் ஸ்ரீவைஷ்ணவன்



ஸ்ரீவைஷ்ணவன் என்பவன் எப்படி யிருக்க வேண்டும்; அவன் அப்பேர்ப் பட்ட தகுதியைப் பெற்று அந்த நிலே நிரந்தரமாக நிலேத்திருக்க அனுஷ் டிக்க வேண்டிய முறைகள் யாவன என்பதை நம்பூர்வாசாரியர்கள் வேத, உபய வேதாந்த இதிஹாச புராணங் களே ஊடுருவி உணர்ந்து கர்ண பரம் பரையாய் கர்மவஸ்யர்களான நம் மையும் வரப்போகிற சந்ததிகளேயும் உஜ்ஜீவிக்க வேணுமென்ற உயர்ந்த உள்ளத்தோடு அருளிச் செய்துள் ளனர். கூறப்பட்ட எல்லாவிதமான நற்குணங்களிலும் பரமகாருணியம் என்பது தலேயாய் நிற்கிறது. மேலும் ஸ்ரீமந் நாராயணனே பரம் என்கின்ற பரம விஸ்வாஸம் வேணும். 'வாசு தேவஸ்ஸர்வம்', அதாவது தாரக, போஷக போக்கியம் எல்லாம் வாசு தேவன் என்கின்ற உள்ளுணர்வு வேண்டும்.

'உண்ணுஞ்சோறு, பருகுநீர் தின் னும் வெற்றிலேயும் எல்லாம் கண்ணன் எம்பெருமான்' என்ற பாசுரமே ஆதாரமாக விளங்குகிறது.

இந்த அடிப்படையில், ஸ்ரீமத் இராமாயணத்திலிருந்து ஸ்ரீவைஷ்ண வனுக்கு இருக்க வேண்டிய முக்கிய லக்ஷணங்களேச் சில உதாரணங்களால் தெளிவுபடுத்தியுள்ளனர்.

1. ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு சம் சாரத்திலிருக்குமிருப்பு யாது என் பது, சிம்சுபா விருக்ஷத்தின்கீழ் சீதா பிராட்டி மாற்றான் மனேயில் சிறையி லிருந்த பரிஸ்ரமம்.

பொன்னொத்த மானென்று புகுந்து பிராட்டியின் முன் இனிது விளேயாட அதனுடைய அழகில் மயங்கிய மங்கை அந்த மாயமானேப் பிடித்துத் தரும்படி பிடிவாதம் பிடிக்க, அதற் கிணங்கி சக்ரவர்த்தி திருமகள் அதன் பின் வில்லேந்தி விரைந்தான். பொய் மானென்றுணர்ந்து ஒரு வாளியினுல் அவனே விண்ணில் ஏற்றும் தருவாயில், அந்த இராக்ஷஸன் மாரீசனுக மாறி கைதவமாக பிராட்டியின் பெயரை யும் இளேயாழ்வானேயும் அழைக்க லானுன். சீதை தன் கணவருக்கு ஏதோ ஓர் இடுக்கண் ஏற்பட்டதாகக் கருதி தன் மைத்துனனே இழிச்சொல் லால் பேசி அபசாரப்பட்டாள். இந்த நிகழ்ச்சியை கம்பன், தனக்கே உரிய பாணியில் விவரித்துள்ளான்.

கலேமான் முதல் ஆயினகண்ட எலாம்
அலேமானுறும் ஆசையின்வந்
தனவால்
நிலேயாமன வஞ்சனே நேயம்இலா
விலேமாதர் கண்யாரும் விழுந்தனவே

குற்றம்வீந்த குணத்தின் என்
கோமகன்
மற்று அவ்வாள் அரக்கன் புரி
மாயையால்
இற்று வீழ்ந்தனன் என்னவும்,
என்அயல்
நிற்றியோ, இளேயோய்! ஒரு நீ
என்ருள்.

ஒரு பகல் பழகினுர் உயிரை ஈவரால்
பெருமகன் உலேவுறு பெற்றிகேட்டும்நீ
வெருவலே நின்றனே; வேறு என்
யான்இனி
எரியிடைக் கடிது வீழ்ந்து இறப்பென்
ஈண்டுஎனு.

ஒரு சேதனன், எம்பெருமானு டைய (ததீயர்), அதாவது அடியார் கள் விஷயத்தில், பண்ணும் அபசார மாகும். இச்செய்கை ஈஸ்வரன் திரு வடிகளே ஆஸ்ரயிக்க முடியாத குற்ற மாகும்.

2. பிராட்டிக்கு அசோகவனம் போலே ஸ்ரீவைஷ்ணவனுக்கு ப்ரக்ருதி சம்பந்தமான தேகம்.

---

திரு. எல். பீ. சம்பத்,
சென்னே-44.

---

ஜகன் மாதா அசோகவனத்திலிருக் கும்பொழுது ஒவ்வொரு நிமிஷமும் ஒரு யுகமாய்த் தோன்ற 'இந்த இடத்தை எப்பொழுது விட்டகன்று சுருதிநாயகன் திருவடியை தீண்டு வோம் என்கின்ற மனத்தாங்கலினுல் சிறை வாசத்தில் வெறுப்புற்றிருந்தது போல ஸ்ரீவைஷ்ணவன் அக்ஞா னத்தை விளேவிக்கின்ற மானுட தேகத்தைவிட்டு 'கூவிக் கொள்ளும் நாளும் குறுகாதோ' என்று ஸ்ரீமந் நாராயணன் திருவடியை அடை

வதற்கு ஆவலுடன் இந்த தேக சம்பந்தத்தில் வெறுப்புற்றிருத்தல் வேண்டும்.

2. பிராட்டிக்கு, கந்தமூல, பலங்கள் சமர்ப்பிக்கிற ராக்ஷஸ ஸ்திரீகளுடைய சகவாசம் போலே, ஸ்ரீ வைஷ்ணவனுக்கு புத்திரமித்திர முதலானவர்களின் சகவாசத்தில் வெறுப்பிருத்தல் வேண்டும்.

4. சீதாதேவிக்கு மாரீச தரிசனம் போலே ஸ்ரீ வைஷ்ணவனுக்கு விஷய ப்ராவண்யம்.

மாய மானை வந்த மாரீசன் மாதாவின் மனத்தைக் கலக்கி, அதனால் தாயாருக்குத் துக்கத்தை விளைவித்தான். ஆசை ஆபத்தில் முடிந்தது. அது போலே ஸ்ரீவைஷ்ணவனுக்கு ஐம்புலன்கள் சத்ருக்களாய் அமையும். புலனடக்கம் அத்யாவஸ்யம் என்பது புலனாகிறது.

5. பிராட்டி சிறிய திருவடியைக் கண்டாப் போலே, ஸ்ரீவைஷ்ணவனுக்கு ஆசார்ய ஸமாச்ரயணம் பண்ணுகை.

விரிமழைக்குலங்கிழித்து ஒளிரும் மின்னொளி போல் கறு நிறத்தரக்கர் குழுவில் கற்புக்கணிகலனை காரிகையை அனுமன் கண்டனன். தொண்டை வாய் மயிலினைத் தொழுது தோன்றி நின்ற அனுமனை 'நிருதன் அல்லன், நெறி நின்று பொறிகள் ஐந்தும் வென்றவன்' என்றும், ஸ்ரீராமதூதன் என்றும் உகப்புண்டானது பிராட்டிக்கு. இந்த அளவிற்கு ஸ்ரீவைஷ்ணவன் ஒரு சதாசாரியனை அடைவதில் மகிழ்ச்சி உண்டாக வேண்டும். ஆசார்யனும் ஒரு சத்பாத்திரம் கிடைத்தது குறித்து ஆனந்தப் பெருக்கெடுத்து வள்ளற் பெரும்பசுக்களாகி விடுகிறார்.

6. பிராட்டிக்குத் திருவடி சொன்ன இராம குணங்கள் போலே ஸ்ரீவைஷ்ணவனுக்கு, சம்பிரதாய கிரந்தங்களில் ஈடுபாடு.

சிறிய திருவடி இராம குண விசேஷங்களையெல்லாம் நயம்பட உரைக்க, அதை செவி மடுத்து பிராட்டியானவள் மனமகிழ்ந்து தேற்றம் ஏற்பட்டது போலே, ஸ்ரீவைஷ்ணவனும் ஆசார்யன்முகே இதிஹாச புராணங்களிலும், பகவத் விஷய சாரத்திலும் ஈடுபட்டு, அசஞ்சலமான நிறைவு பெற்று பெருமாளிடம் பரம விஸ்வாஸத்தை தெள்ளென அறிந்து கொள்ள வேட்கையுடையவனாயிருந்து நடைமுறையில் அனுஷ்டிக்க வேண்டும்.

7. சீதா பிராட்டிக்கு ஸ்ரீமுத்திரியைக் கொடுத்து வரவு சொன்னாற்போலே ஸ்ரீ வைஷ்ணவனுக்கு ஆசார்யன் அருளிச்செய்த குருபரம்பரை.

அனுமன், மிக்க பெருஞ்சபை நடுவே வில்லிருத்தான் மோதிரத்தை அடையாளமாகக் கொடுத்துத் தான் ஸ்ரீ இராமனுக்கு பணிவிடை செய்யும் தாஸபூதனென்று, தாயாரின் சம்சயத்தைப் போக்கி, அவள் தனக்கு இனி இராம பிராப்தி சித்தம் என்று திடமான நம்பிக்கையோடு இருப்பது போலே, ஸ்ரீ வைஷ்ணவனுக்கு தான் வரிக்கும் ஆசார்யனிடம் தந்நிகரில்லா ஸமாச்ரயணஞ்செய்து கொண்டு குரு பரம்பரையை உபதேசிக்கக் கேட்டு, அதன் விளைவாக அவனுக்கு இது வரையிலிருந்த சம்சயம் நீங்கப் பெற்று பகவத் பிராப்தி கட்டாயமுண்டு என்ற உணர்ச்சி உண்டாகும்.

8. பிராட்டி திருவடிக்கு சிரோரத்னம் கொடுத்தாற்போலே இவனுக்கு ஆசார்யன் சொன்ன திருமந்திரம்.

தாயார் கொடுத்த சூளாமணியானது சிறிய திருவடிக்கு உஜ்ஜீவன ஹேதுவாயிருந்தது போல ஆசாரியன் உபதேசித்த திருமந்திரத்தின் அர்த்தாநுசந்தானமே உண்மையறிவைப் பிறப்பிக்கும் என்பதில் அசஞ்சலமான மனத்தெளிவை உண்டாக்கும்.

9. பிராட்டிக்கு ஸ்ரீ விபீஷணாழ்வான் திருமகளார் பேச்சுத் துணையானாற்போலே ஸ்ரீவைஷ்ணவனுக்கும் பாகவத சகவாசமும் அவர்கள் திவ்ய ஸூக்தியும்.

ஸ்ரீ விபீஷணாழ்வான் திருமகளாகிய திரிஜடை, சிறையிலிருந்த சீதாப் பிராட்டிக்கு அப்பொழுதக்கப் பொழுது நல்சொற்கள் கூறி பிராட்டிக்குப் பெரிதும் துணையாயிருந்து, மனோதைரியத்தை உண்டாக்கியது போல, ஸ்ரீவைஷ்ணவனுக்கு, பாகவதர்களின் உறவும் அவர்கள் உப உபதேசிக்கும் இன்னுரையும் பகவத் சம்பந்தமான விஷயங்களில் ஈடுபடுவது பெரிதும் துணையாயிருக்கும்.

10. விரோதிகளான இராவண கும்பகர்ணாதிகளைச் சங்கரித்து பெருமாள் சீதா பிராட்டி சமேதராம் திருவயோத்திக்கு எழுந்தருளினாப் போலே, ஸ்ரீ வைஷ்ணவனுக்கு, விரோதிகளான தேவதாந்த்ர மந்திரார்த்தங்களையும், ப்ரக்ருதி சம்பந்தத்தையும் ஒழித்து உடையவன் இச்சேதநனைத் திருத்திப் பணி கொண்டு ததனந்தரம் நித்ய ஸூரிகளோடே ஒரு கோர்வையாகத் தன்னை நித்யாநுபவம் பண்ணி வைப்பான்.

க்ஷமையின் இருப்பிடமான தாயாருக்கு இழைத்த துன்பத்திற்கு செருவில் இராக்ஷஸர்கள் மாண்டு, சீதையை மீட்டு அயோத்திக்கழைத்துச் சென்றது போல, ஸ்ரீ வைஷ்ணவனுக்கு விரோதிகளாகிய அன்னிய தெய்வங்களைப் பஜித்தல் முதலியவைகளையும், தேக சம்பந்தத்தையும் ஒழித்துப் பரமபதத்திற் கழைத்துச் சென்று நித்ய ஸூரிகளோடே நியாநுபவஞ் செய்யும் படிச் செய்தருள்வன்.



**(4-ம் பக்கத் தொடர்ச்சி)**

அமைந்து இருக்கும். பௌர்ணமி யன்று ஜனித்தவர்கட்கு சூரியனும், சந்திரனும் ஸம ஸப்தகமாக அமைந்து இருக்கும். எப்படி நட்சத்திரங்கட்குத் தனித்தனியே அதிதேவதைகள் உண்டோ அவ்விதமே திதிகட்கும் உண்டு. ப்ரதமைக்கு அக்னியும், த்விதீயைக்கு ப்ரும்மாவும், த்ருதீயைக்குப் பார்வதியும், சதுர்த்திக்கு கணபதியும், பஞ்சமிக்கு ஸர்ப்ப தேவதையும், சஷ்டிக்கு சுப்ரம்மண்யரும், ஸப்தமிக்கு சூரியனும், அஷ்டமி திதிக்கு சிவபெருமானும், நவமிக்கு அஷ்டவசுக்களும், தசமிக்கு திக்கஜங்களும், ஏகாதசிக்கு யமனும், த்வாதசிக்கு விஷ்ணுவும், த்ரயோதசிக்கு மன்மதனும், சதுர்த்தசிக்கு கலி புருஷனும், அமாவாசைக்கு பித்ரு தேவதைகளும், பௌர்ணமிக்கு சந்திரனும் அதிதேவதைகளாக ப்ருஹத் ஸம்ஹிதை முதலிய நூல்கள் குறிப்பிடுகின்றன. 'பித்ர்யே ராத்ர்யஹனீ மாஸ: ப்ரவிபாகஸ்து பக்ஷயோ:' என்ற வரிகள் சுக்ல பட்சம் முழுதும் பிதுர்களின் பகல் என்றும், க்ருஷ்ண பட்சம் முழுவதும் பிதுர்களின் இரவு என்றும் குறிப்பிடுகின்றது. பிதுர் சிராத்தங்கள் செய்வது பெரும்பாலும் பகல் பன்னிரண்டு மணியளவில், என்று சிரார்த்த திதி வருகிறதோ, அன்றுதான் செய்ய வேண்டும். ஏனெனில் நடுப்பகலில் பூமி சற்றுத் தெற்கு நோக்கி சாய்ந்து சுழல்வதாக சாஸ்திரங்களில் கூறப்படுகிறது.

திதியின் பாதி நேரமே கரணம் எனப்படும். சுக்லபட்ச பிரதமையின் பின்பகுதி முதல் க்ருஷ்ண பட்ச சதுர்த்தசியின் முன்பகுதி வரை முறையே பவம், பாலவம், கௌலவம், தைதிலம், கரம், வணிஜம், விஷ்டி என்ற ஏழு சர கரணங்கள் ஆட்சி புரிகின்றன. க்ருஷ்ண பட்ச சதுர்த்தசியின் பின்பாதி முதல் சுக்ல பட்ச பிரதமையின் முற்பகுதி வரையில் சகுனி, நாகம், சதுஷ்பதம், கிம்ஸ்துக்னம் என்ற நான்கு ஸ்திர கரணங்களும் ஆட்சி புரிகின்றன. இந்த பதினொரு கரணங்களில், பவம் முதல் வணிஜம் வரை உள்ள ஆறு கரணங்களும் சுப காரியம் செய்ய உகந்தவை. இந்த பதினொரு கரணங்கட்கும் முறையே அதிதேவதைகள் உண்டு. இவர்கள் முறையே இந்திரன், ப்ரும்மா, மித்ரன், அர்யமா, பூமி, லக்ஷ்மீ, யமன், கலிபுருஷன், ஸர்ப்பம், வ்ருஷம், வாயு முதலியவர்கள் ஆவார்கள். மேற்படி கரணத்தைக் கொண்டே "கரணம் தப்பினால் மரணம்' என்ற பழமொழி உண்டாகி இருக்கிறது. மேற்கண்ட கரணங்களைப் பற்றி ப்ருஹத் ஸம்ஹிதை அழகாகக் கூறுகிறது.

அடுத்தபடியாக வாரங்களில் ஞாயிற்றுக்கிழமைக்கு அதிதேவதை அக்னி என்றும், திங்கட்கிழமைக்கு ஜல தேவதை என்றும், செவ்வாய்க் கிழமைக்கு பூமி என்றும், புதனுக்கு விஷ்ணு என்றும், வியாழனுக்கு இந்திரனெனவும், வெள்ளிக்கு இந்திராணி எனவும், சனிக்கிழமைக்கு ப்ரும்மா என்றும் வகுக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு நாளும் இரவும் பகலும் குறிப்பிட்ட கால அளவு வீதம் நவகிரகங்கள் நம்மை ஆட்சி புரிகின்றன. இந்தக் கால அளவுக்கு ஹோரைகள் என்று பெயர். பிரதிதினமும் அன்று என்ன கிழமை நடைபெறுகிறதோ அந்த ஹோரையே காலை முதலில் நடக்கும் ஹோரையாகும். இது ஒரு குறிப்பிட்ட அமைப்பில் நடைபெறுகிறது. இதனைப் பெரியோர்கள் 'மந்திரி மங்கள மார்த்தாண்ட: சுக்ர ரேந்து சனைச்சர:' என்று குறிப்பிடுவர். மேற்கண்ட சுழற்சியின்படி ஒவ்வொரு நாளும் ஹோரா காலம் நடைபெறுகிறது. ஒரு ஹோரை என்பது 1 மணி நேரமாகும். உதாரணமாக செவ்வாய்க் கிழமையை எடுத்துக் கொள்வோம். 'மங்கள' என்பது செவ்வாயைக் குறிக்கும். எனவே பிரதிசெவ்வாய் காலை ஆறு மணி முதல் ஏழு வரை செவ்வாய் ஹோரையாகும். அடுத்த ஒரு மணி நேரம் 'மார்த்தாண்ட' எனப்படும் சூரிய ஹோரை ஆகும். பிறகு சுக்ரன் காலமாகும். பிறகு 'ரே' எனப்படும் புதஹோரையாகும். பின் "இந்து" ஹோரை, அதாவது சந்திரஹோரையின் காலம் நடைபெறும். பிறகு சனிஹோரை நடைபெறும். அடுத்து மீண்டும் 'மந்திரி' எனப்படும் குரு ஹோரை தொடங்கிவிடும். இவ்விதம் ஒவ்வொரு நாளும் ஏதாவது மூன்று கிரகங்களின் ஹோரை மூன்று முறையும் நடைபெறும்.

அடுத்தபடி த்யாஜ்யம் என்று பஞ்சாங்கத்தில் குறிப்பிடப்பட்டு இருப்பது சுபகாரியங்கட்கு விலக்க வேண்டியதாகும். இதனை விஷ கடிகை என்று கூறுவர். இதில் நட்சத்திர த்யாஜ்யம், திதி த்யாஜ்யம், வார த்யாஜ்யம் என்று மூன்று வகை உண்டு. இதில் நட்சத்திர த்யாஜ்யம் முக்யமானது. த்யாஜ்ய காலம் சுமார் $3\frac{3}{4}$ நாழிகை. அதாவது ஒன்றரை மணி நேரம் ஒவ்வொரு நாளும் ஏற்படும். உதாரணமாக த்யாஜ்யம் 33-27 என்று வைத்துக் கொண்டால், அன்றைய தினம் 33-27 நாழிகைக்கு மேல் சுமார் நான்கு நாழிகை விலக்கப்பட வேண்டிய நேரம் என்று பொருள். இதேபோல் பிரயாணம் கிருஹப்ரவேசம், புதுமனைக் கட்டுதல் இவற்றுக்கு யோகினி அறிதல் அவசியம். யோகினி நேத்ரை, ஜீவன் என்று இரு பிரிவுகள் கொண்டது. ஒவ்வொரு நாளும் ஏதாவது ஒரு திசையில் யோகினியும், வாரசூலையும் உண்டு. அதை அறிந்து செயல்பட வேண்டும். தவிர, பிரதிதினமும் ராகு காலம், எமகண்டகம் முதலிய நேரங்களும் உதவாத காலமாகும். மற்றபடி எந்தெந்த காரியங்கட்கு என்ன திதி, நட்சத்திரம் நல்லது கெட்டது என்ற விபரம் பஞ்சாங்கத்தில் குறிப்பிடப்பட்டு இருக்கும்.

இது தவிர காலத்தை ஸ்தூலம், ஸூக்ஷ்மம் என இரண்டு விதமாகக் கூறலாம். ஒன்று நாம் ஒரு குறிப்

## சந்தாதாரர்களுக்கு....

30-6-88—ஆம் தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். ஆங்கிலத்தில் கடிதத் தொடர்பு கொள்ளவும்.

50 82 102 135 138 141 179 195 196 200 203 215 253 326 331 337 343 344 461 698 699 702 703 705 706 711 712 714 715 716 721 722 725 726 1337 1586 1595 1602 1603 1605 1611 1615 1616 1618 1620 1633 1642 1644 1648 1649 1651 1653 1665 1668 1674 1690 1691 1693 1694 3040 3041 3046 3048 முதல் 3081 3083 3084 3085 3086 3092 முதல் 3100 3102 முதல் 3132.

பிட்ட நேரத்தைத் தேர்ந்தெடுப்பது. மற்றொன்று நம் பூர்வ புண்யத்தின் பயனாகத் தானாகக் கிடைப்பதாகும். பொதுவாகக் கால தேவதைக்கு ஆத்மா சூரியன் என்றும், புத்தி சந்திரன் என்றும், பலம் அங்காரகன் என்றும், வாக்கு புதன் எனவும், அறிவைக் குருவாகவும், காமத்தை சுக்ரனாகவும், துக்கமே சனி என்றும் ஜாதகாதேசம் என்ற நூல் கூறுகிறது. ப்ரபவ முதல் அக்ஷய வரை உள்ள அறுபது வருட தேவதைகளும் நாரதருடைய பிள்ளைகள் என்று புராணங்கள் கூறுகின்றன. மேலே குறிப்பிட்ட பலவித செய்திகளை ப்ருஹத் ஸம்ஹிதை, ஜோதிஷ ராகவம் முதலிய சாஸ்திரங்கள் கூறுகின்றன. பொதுவாகப் பன்னிரண்டு ராசிகளில் சூர்யனது ஸஞ்சாரத்தைக் கொண்டு கணக்கிடப்படுவது சித்திரை முதல் பங்குனி வரை உள்ள ஸௌர மாதங்களாகும். சுக்லபட்ச பிரதமை முதல் அமாவாசை முடிய சந்திரனின் கதியை வைத்து நிர்ணயிப்பது சைத்ரம், வைசாகம், ஜ்யேஷ்டம், ஆஷாடம், ச்ராவணம், பாத்ரபதம், ஆச்வயுஜம், கார்த்திகம், மார்கசீர்ஷம், புஷ்யம், மாகம், பால்குனம் முதலிய சாந்த்ர மாதங்களாகும்.

பொதுவாக சித்திரை, ஐப்பசி மாதப் பிறப்பை விஷு புண்ய காலம் என்றும், வைகாசி, ஆவணி, கார்த்திகை, மாசி மாதம் முதல் தினம் வரும் மாதப்பிறப்பை விஷ்ணுபதி புண்ய காலம் என்றும், ஆனி, புரட்டாசி, மார்கழி, பங்குனி மாதப் பிறப்பை ஷடசீதி என்றும், தை மாதம் முதல் தினத்தை உத்தராயணம் என்றும், ஆடி மாதப் பிறப்பை தக்ஷிணாயனம் என்றும் கூறுகிறோம்.

தவிர ஒவ்வொரு ஆண்டுக்கும் ஏதாவது ஒரு கிரகம் ராஜா என்றும், ஏதாவது ஒரு கிரகம் மந்திரி என்றும் இவ்விதம் நவகிரகங்கட்கும் பலவித ஆதிபத்யங்கள் அமைவது உண்டு. இதைக் கணக்கிட சில விதிமுறைகள் உண்டு. உதாரணமாக ஒரு வருடத்தின் பங்குனி மாத அமாவாசைக்கு அடுத்த பிரதமை எந்தக் கிழமையில் ஏற்படுகிறதோ அந்தக் கிழமைக்கு உரியவனே அடுத்து புதியதாகப் பிறக்கப் போகும் ஆண்டுக்கு ராஜாவாக நியமனம் ஆகிறார். சித்திரை மாதப் பிறப்பு எந்தக் கிழமையில் ஏற்படுகிறதோ, அந்தக் கிழமைக்கு உரியவரே புது வருட மந்திரி பதவி வகிக்கிறார். இவ்விதம் முறையே நவநாயகர்களும் கிரமமாக அமைகிறார்கள்.

இறுதியாகப் பஞ்சாங்கத்தின் ஒரு அங்கமான யோகம் என்றால் என்ன என்று கவனிப்போம். அன்றாடம் வார, நட்சத்திர ஸம்பந்தத்தைக் கொண்டு, ஸித்த யோகம், அமிர்த யோகம், பிரபலாரிஷ்ட யோகம், முதலியன கணிக்கப்படுகின்றன. ஆனால் ராசிச் சக்கரத்தில் சூர்யனும், சந்திரனும் கூடி ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருந்து நகர்ந்து செல்லும் ஒவ்வொரு மொத்த தூரமும் மட்டுமே ஒரு யோகம் எனப்படும். இவ்விதம் இருபத்தேழு யோகங்கள் உண்டு. இந்த இருபத்தேழில் ஒன்பது யோகங்கள் சுபகாரியத்துக்கு உகந்தவை அல்ல. இந்த யோகங்கள் யாவும் நித்யமானவை. இவைகள் முறையே விஷ்கம்பம், ப்ரீதி, ஆயுஷ்மான், ஸௌபாக்யம், சோபனம், அதிகண்டம், சுகர்மம், த்ருதி, சூலம், கண்டம், வ்ருத்தி, துருவம், வியாகரதம், ஹர்ஷணம், வஜ்ரம், ஸித்தி, வியதீபாதம், வரியான், பரீகம், சிவம், ஸித்தம், ஸாத்யம், சுபம், சுப்பிரம், பிராம்மம், மாஹேந்திரம், வைத்ருதி என்பனவாகும். இந்த யோகங்கட்கும் தனித்தனியே அதிதேவதைகள் உண்டு. அவர்களை ஸ்மரிப்பது நமக்கு ஸகல க்ஷேமங்களையும் தரும். எனவே ஒவ்வொருவரும் பஞ்சாங்கத்தைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டியது அவசியமாகிறது. இந்நாளில் பலவித அலுவல்கள் நிமித்தமாக நாம் பஞ்சாங்கத்தைக் கடைப்பிடிக்க முடியாமல் போனாலும் நட்சத்திரம், கிரகம், திதி, யோகம் முதலிய யாவும் சிம்சுமார மூர்த்தியான ஸ்ரீமந்நாராயணனின் விராட் ஸ்வரூபத்தில் அடக்கம் எனக் கருதி ஸ்ரீவிஷ்ணுவை பஜித்து செயல்பட்டால் பகவான் நம்மைக் காப்பாற்றுவார். இதனால் தான்,

"திதிர் விஷ்ணுஸ்ததா வார: நக்ஷத்ரம் விஷ்ணுரேவச
யோகாச்ச கரணம் சைவ ஸர்வம் விஷ்ணு மயம் ஜகத்"

என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. மஹா பாரதமும் திதி, வாரம், கரணம், நட்சத்திரம், யோகம் முதலிய யாவுமே நமக்கு நன்மை செய்யட்டும் என்று பிரார்த்திக்கிறது.

ஆதித்யாதி நவக்ரஹா: சுபகரா
மேஷாதயோ ராசய:
நக்ஷத்ராணி ஸயோககாச்ச திதய:
தத்தேவதா:தத்கணா:
மாஸாப்தா ருதவ ஸ்ததைவ திவஸா:
ஸந்த்யா ஸ்ததா ராத்ரய:
ஸர்வே ஸ்தாவர ஜங்கமா: ப்ரதிதினம்
குர்வந்துவோ மங்களம்.



# செய்திச் சுருக்கம்



திருமலைக்கோயிலில் திரு. பிரேமதாஸா அவர்கள்.

**திருமலையில் :**

இலங்கை நாட்டு பிரதம மந்திரி திரு. ஆர். பிரேமதாஸா அவர்கள் தம் துணைவியாருடன் 22-4-88 அன்று திருமலைக்கு வருகை புரிந்தார். அன்று காலை அவர் கோயில் மரியாதைகளுடன் எதிர்கொள்ளப்பட்டார். அவ்வமயம், தி. தி. தே. உயர் அலுவலர்களும் உடன் இருந்தனர்.

∗ ∗ ∗

திருமலையில் சேஷாத்ரி நகரில் சுமார் ரு. 30 இலட்சம் செலவில் தி. தி. தேவஸ்தானத்தாரால் புதியதாகக் கட்டப்பட்ட, 36 அறைத் தொகுதிகளைக் கொண்ட, விருந்தினர் விடுதி ஒன்றினை தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழுத் தலைவர். திரு. டி. சீதாராமய்யா அவர்கள் திறந்து வைத்தார். ஒரு அறைத் தொகுதிக்கு நாள் ஒன்றிற்கான வாடகை ரூ. 50/- ஆகும்.

∗ ∗ ∗

திருப்பதி ஸ்ரீ அன்னமாச்சார்யா கலா மந்திரத்தில் திருப்பதி புக்க மடத்தின் ஆதரவில் பன்மொழிக் கவிஞர்கள் பங்கேற்ற 'இராமாயண கவி சம்மேளன்' ஒன்று அண்மையில் நடை பெற்றது. இக்கவி சம்மேளனத்தை ஆந்திர மாநில அறநிலையத் துறை ஆணையர் திரு. பாபு ரெட்டி அவர்கள் துவக்கி வைத்தார். திரு. இளங்கோ மற்றும் திரு. சந்திரமௌலி ஆகியோர் தமிழ்நாட்டின் சார்பில் பங்கேற்றனர்.

**ஸ்ரீ தியாகராஜா இசை விழா :**

திருப்பதி ஸ்ரீ தியாகராஜா அறக்குழு மற்றும் ஸ்ரீ தியாகராஜர் விழாக் குழுவினர் அண்மையில் திருப்பதி ஸ்ரீ தியாகராஜா மண்டபத்தில் பத்து நாள் இசை விழா ஒன்றினை ஏற்பாடு செய்தனர். இதுபோது மாலை நேரங்களில், தமிழ்நாட்டின் புகழ்பெற்ற கர்னாடக இசைக் கலைஞர்களின் இசைக் கச்சேரிகள் நடைபெற்றன. இவ்வருட விழாவின்போது, புகழ்பெற்ற வயலின் மேதை திரு. லால்குடி ஜெயராமன் அவர்களுக்கு 'ஸப்தகிரி சங்கீத வித்வன் மணி' எனும் சிறப்புப்பட்டம் அளித்த சிறப்பு நிகழ்ச்சி நடைபெற்றது. இந்நிகழ்ச்சிகளுக்குச் சிறப்பு விருந்தினராக பங்கேற்ற சென்னை மியூசிக் அகாடமி தலைவர் திரு. டி. டி. வாசு அவர்கள் ஸ்ரீ தியாகராஜா அறக்குழுவின் சார்பில், மேற்படி பட்டத்தினை திரு. லால்குடி ஜெயராமன் அவர்களுக்கு அளித்தார். பின் தம் சிறப்புரையில் திருப்பதி ஸ்ரீ தியாகராஜர் விழாக் குழு கர்னாடக இசையின் பெருமையை திருப்பதியில் பரப்ப முயற்சிகள் பல மேற்கொண்டு வரும் பணியினைப் புகழ்ந்தார். மேலும் தற்போது உள்ள திறந்த வெளி அரங்கினை ஒரு 'முழு கட்டிடமாகத் திகழச் செய்ய தி. தி. தேவஸ்தானம் தன்னாலியன்ற உதவியினைச் செய்ய வேண்டும் என்று கேட்டுக் கொண்டார். இச்சிறப்பு நிகழ்ச்சிகளுக்கு, ஐக்கிய நாடுகளின் முன்னாள் நேருதவிச் செயலர் திரு. சி. வி. நரசிம்மன் அவர்கள் தலைமை வகித்தார்.

பின்னர் தனக்குக் கிடைத்த பாராட்டிற்கு நன்றி கூறிடும் வகையில் தன் பதிலுரையில் திரு. லால்குடி ஜெயராமன் அவர்கள், கலைஞர்கள், ரசிகர்கள், அமைப்பாளர்கள், இசை விமர்ச்சகர்கள் ஆகியோரே கர்னாடக இசையின் நான்கு தூண்களாகக் கருதப்படுகின்றனர் என்று குறிப்பிட்டார். அன்று இரவு தனது இரண்டு மணி நேர வயலின் இசைக் கச்சேரியில் ரசிகர்களை மெய் மறக்கச் செய்தார்.

**திருப்பதி திருமலை 19ஆம் ஆண்டு படி விழா :**

திருப்பதி படிவிழாவின் முதல் நாளான திங்கட்கிழமை காலை திருச்சானூர் பத்மாவதி கோவிலில் படி விழா செயலாளர் ஆ. செ. நரசிம்மன் தலைமையில் பஜனைக் குருவினர்கள் பக்திப் பாடல்களைப் பாடிக்கொண்டு, கோவிலுக்குள்ளும், நகரிலும் பாடல்களைப் பாடிக்கொண்டு, கோவிலுக்குள்ளும் நகரிலும் ஊர்வலமாக வந்து திருப்பதி 2வது சத்திரத்தை வந்தடைந்தார்கள். மாலை 4 மணிக்குப் புறப்பட்டு ஊர்வலமாக திருப்பதி நகரில் சென்று மாலை 7 மணிக்கு அன்னமாச்சார்யா கலா மந்திரத்தை அடைந்தனர். அங்குத் திருப்பதி தேவஸ்தான தர்மபிரசார பரிஷத் செயலாளர் மேடஸானி மோகன் தலைமையில் பக்தி நிகழ்ச்சிகள் நடைபெற்றன. டி. எஸ். அனந்த நாராயண அடிகளார், கரந்தை தாமோதரன், குடியாத்தம் டி. ஆண்டாள், மதுரை பரமசிவம் மற்றும் பல குழுவினர்களின் பக்திப் பாட்டுக் கச்சேரிகள் நடைபெற்றன.

மறுநாள் செவ்வாய்க் கிழமை அதிகாலை 5.30 மணிக்கு திருமலை அடிவாரத்தில் மின்னல் நரசிம்மன், விளாப்பாக்கம் சம்பத் ஜெயபால் குழுவினரின் நாதஸ்வர இன்னிசையுடன், திருப்பதி தேவஸ்தான அதிகாரிகள் டாக்டர் மேடஸானிமோகன், ஆதிநாராயணு ஆகியோர் முன்னிலையில் படி விழா நிகழ்ச்சிகள் துவங்கப்பெற்றன. பொதுச் செயலாளர் ஆற்காடு ஆ. செ. நரசிம்மன் அனைவரையும் வரவேற்றுப் பேசினர். திருப்பதி மலையில் தினசரி நடைபெறும் அன்ன

# படைப்பின் கதை?

குழந்தைகளே, உலகிலுள்ள எல்லா பிராணிகளையும் (மனிதன் உட்பட) படைத்தவன் பிரம்மன் ஆவான். ஒவ்வொரு நாளும் சில பிராணிகளைப் படைத்து அதற்கு வயதையும் அளித்து வந்தான். ஒரு நாள் பிரம்மன் மனிதன், மாடு, நாய், ஆந்தை ஆகிய நான்கினையும் படைத்து ஒவ்வொன்றுக்கும் நாற்பது வயது அளித்தான். அதாவது மேற்கண்ட பிராணிகள் நாற்பது வயது வரை உயிர் வாழலாம். அதைக் கேட்ட பேராசை கொண்ட மனிதன் முதலில் பிரம்மனிடம் 'சுவாமி,எனக்கும் நாற்பதுவயது,மாட்டிற்கும் நாற்பது வயதா? மாடு வண்டி இழுக்கும், ஏர் உழும்.இவைதான் அதன் வேலை.அதனுடைய வயதிலிருந்து பாதி எனக்குக் கொடுங்கள்'என்றான். அதற்கு பிரம்மன் அப்படியே ஆகட்டும் என்றான். இப்போது மனிதனின் அறுபது ஆகியது. பிறகு மனிதன், 'நாய்க்கும் நாற்பது வயதா, காரணமில்லாமல் குரைப்பது, வீடு வீடாகச் சென்று உணவுக்காக அலைவது, இதுதான் அதன் வேலை. அதனுடைய வயதிலிருந்து பாதி வயது எனக்குக் கொடுங்கள்'என்றான்.இதற்கும் பிரம்மன் அப்படியே ஆகட்டும் என்றான். இப்போது மனிதனின், வயது எண்பது வயது ஆகியது. அதற்குப் பிறகு மனிதன், 'ஆந்தைக்கும் நாற்பது வயதா. அதன் வேலை ஒன்றும் இல்லை இல்லை. கண் தெரியாமல் விழித்துக் கொண்டிருக்கும். ஆகவே அதன் வயதிலிருந்து பாதி எனக்குக் கொடுங்கள்' என்றான். அதற்கும் பிரம்மன் அப்படியே ஆகட்டும் என்றான். இப்போது மனிதனின் வயது நூறு ஆகிவிட்டது.

பிரம்மனால் கொடுக்கப்பட்ட வயது நாற்பது வரையில் மனிதன் கவலை இல்லாமல் வாழ்ந்து வருகிறான். பிறகு மாட்டின் வயது அல்லவா? மாடு போல் இரவும், பகலும் உழைக்கிறான். குடும்பச் செலவை சமாளிக்க முடியவில்லை. (மேலும் ஐம்பத்தைந்து முதல் அறுபது வயதுக்குள் வேலையிலிருந்து ஓய்வு பெறுகிறான் மனிதன்) அதற்குப் பிறகு நாய் வயது அல்லவா? காரணம் இல்லாமல் பிள்ளைகளைப் பார்த்துக் கத்துகிறான். மகன்கள் சோறு போடுவார்களா, மகள்கள் சோறு போடுவார்களா என்று வீடு வீடாக அலைகிறான். அதற்குப் பிறகு ஆந்தை வயது அல்லவா? கண் தெரிவதில்லை. வீட்டிற்குள் முழித்துக்கொண்டு மூலையில் உட்கார்ந்துக் கொண்டிருக்கிறான். இவ்வாறு நூறு வயது வரையில் வாழ்கிறான். இப்போது கேட்டீர்களா படைப்பின் கதையை!

தி. வி. பார்த்தசாரதி - காஞ்சிபுரம்.

தான கைங்கர்யத்திற்கு படிவிழா சங்கத்தினரால் தேவஸ்தான அதிகாரிகளிடம் ரூ. 1000/- அளிப்பதாகவும் கூறினர். இதனைச் சங்கப் பொருளாளர் வேலூர் வி.ஏ.புண்ணியகோட்டி டாக்டர். மோகனிடம் அளித்தார்.

பெண்கள் ஒவ்வொரு படிக்கும் மஞ்சள் குங்குமம் வைத்து, கற்பூரம் ஏற்றித் தேங்காய் உடைத்து பூஜை செய்த பிறகு திருமலையில் நித்ய பஜனை செய்து வரும் டி. எஸ். அனந்த நாராயண அடிகளார் பாடிச் செல்ல 120 ஊர்களிலிருந்து வந்திருந்த பஜனைக் குழுவினர்களும் நாடெங்கிலுமிருந்து வந்திருந்த 5000 பக்தர்களும், பாடிக்கொண்டு ஏழுமலையேறிச் சென்று ஏழுமலையானைத் தரிசித்தார்கள்.பெண்களும்சிறுவர்களும், சிறுமிகளும் பாடிக்கொண்டே மலையேறிய காட்சி மெய்சிலிர்க்க வைத்தது. திருப்பதி கோவிலில் பிரசாதங்கள் செய்யும் எம். ஆர். ஸ்ரீநிவாச அய்யங்கார் பிரசாதங்களைத் தயாரித்துக்கொண்டுவந்து வழியில், கருடர் சிலை எதிரில் பக்தர்களுக்கு இலவசமாக வழங்கினர். மாலையில் சுவாமி ஊர்வலம் நடைபெற்றது. இரவு சதஸ் மண்டபத்தில் பஜனைப் பாடல்களைப் பாடினார்கள். மறுநாள் புதன் கிழமை காலை 9 மணிக்கு, திருமலை கோவிலுக்கு எதிரிலுள்ள சதஸ் மண்டபத்தில் டாக்டர். ராமய்யா தலைமையில் கருத்தரங்கமும், நடாத்தூர் விஜய ராகவாச்சாரியார் தலைமையில் கவியரங்கமும் நடைபெற்றன.

திருத்தணிகை அரசு கலைக் கல்லூரி பேராசிரியர் கோதண்டபாணி, மதுராந்தகம் ரகுவீர பட்டாச்சாரியார், வீராபுரம் சம்பத் அய்யங்கார், வழக்கறிஞர் இந்திரஜித், டி. எஸ். அனந்த நாராயண அடிகளார், திருமலை ஜடாதரன், நிர்மலா ராமய்யா மற்றும் பலர் கவிதைகள், சொற்பொழிகள் ஆற்றினர்கள், காஞ்சிபுரம் தாமோதரம்,குடியாத்தம் ஆண்டாள், பரமசிவம் குழுவினரின் பாட்டுக் கச்சேரிகள் நடைபெறறன.

செயலாளர் ஆற்காடு ஆ. செ. நரசிம்மன் அனைவரையும் வரவேற்றுப் பேசுகையில், தனது பல ஆண்டு கால கனவு இவ்வாண்டு பூர்த்தியானதாகவும், இனி ஒவ்வொரு ஆண்டும் பல அறிஞர், புலவர் பெருமக்களைக் கொண்டு இதைப் போன்று கவியரங்கம்-பட்டி மன்றம்-வழக்காடு மன்றம்-கருத்தரங்கம் ஆகியவை பெருமளவில் நடத்தப்படும் என்றும், 3 நாட்களும் திருப்பதியில் தமிழ் முழங்கும் என்றும் கூறியதோடு,இங்குப் பேசப்படும் அனைத்து நிகழ்ச்சிகளும்-மலையைச் சுற்றியும் மலையடிவாரத்திலும் பல ஒலி பெருக்கிகள் மூலம் ஒலி பரப்பப்படுவதாகவும் ஆயிரக் கணக்கான மக்கள் அதனைக் கேட்டுப் பயனடைய வேண்டும் எனவும் கேட்டுக் கொண்டார்.

★

தி. தி. தேவஸ்தான உதவி செயலாட்சித்தலைவரான திரு. பி. வாசுதேவநாயுடு அவர்கள் தற்போது தி. தி.தே.சிறப்புநிலைஉதவிசெயலாட்சித் தலைவராக நியமிக்கப்பட்டுள்ளார்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-51750.1

